பெருந்தலைவர் காமராசர்
அறக்கட்டளை நிறுவியோர் : நாடார் மக்கள் சங்கம், மதுரை)

வரிசை எண் : 9

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Marutattil makkaḷ vāḻviyal |
| Author | : | Mr. E. Baluchamy<br>9, Raji Reddiyar Garden<br>Anna Nagar, Pattabiram<br>Chennai - 600 072 |
| General Editor | : | Dr. K.A. Gunasekaran<br>Director<br>Faculty of Tamil Literature and Manuscriptology<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 691 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2011 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 88 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 40/- (Rupees Forty only) |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Life style of Marudam people |


---

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

**மருதத்தில் மக்கள் வாழ்வியல்** எனும் இந்நூல் எனது கெழுதகை நண்பர் திரு. எ. பாலுச்சாமி அவர்களால் பொருத்தமாக உட்தலைப்புகள் கொடுக்கப்பட்டு சங்கப் பாடல்கள் துணைக்கொண்டும் உரையாசிரியர் துணைக்கொண்டும் மார்க்சிய வழிநின்று ஆய்ந்துரைக்கப் பட்ட விவரனம் அடங்கிய நூலாக அமைந்துள்ளது. நிலப்பாகுபாடுகள், போர்கள், நகர்கள், சேரிகள், மக்கள் பிரிவுகள், குலமக்கள், தலைமக்கள், மேலான சமூகப் பிரிவுகள், வர்க்கப் பிரிவுகள், ஊர்மன்ற செயற்பாடுகள் என விளக்கியுள்ள பாங்கு நா. வானமாமலை, க. கைலாசபதி, கா. சிவத்தம்பி, கோ. கேசவன் போன்ற அறிஞர்களின் தமிழாய்வுச் சிந்தனைகளை நினைவுபடுத்துபவையாக உள்ளன.

விழாக்களும் சடங்குகளும் எனும் தலைப்பில் விழா காட்டும் பண்பாடு, விளக்கேற்றுவிழா, இந்திர விழா, சிறுதெய்வ சடங்கு, கூத்துகள், சடங்குகளும் நம்பிக்கைகளும், மணச்சடங்கு, ஈமச்சடங்கு எனுமாறு சங்கப்பாடல்களில் சான்றுகள் காட்டி தெளிவுர விளக்கியுள்ளார்.

குடும்பமும் உடைமையும் எனும் தலைப்பில் தாய்வழிச் சமூகத்தில் குடும்பம், தந்தைவழி, சமூகத்தில் குடும்பம் என விளக்கி மருதநில வாழ்வில் குடும்பம் குறித்து விரித்துக் காட்டி முறையே விளக்கியுள்ளமை, ஆண்களின் உணர்ச்சிச் சுதந்திரம் குறித்து விளக்கியுள்ளமை, உடைமை குறித்து விளக்கியுள்ளமை, உடைமைக்கும் குடும்பத்திற்கும் உள்ள தொடர்பு குறித்தி விளக்கியுள்ளமை, தனிவுடைமை, நிலவுடைமை குறித்து விளக்கியுள்ளமை, மருதத்தில் தோன்றிய நிலவுடைமைச் சமுதாயம் என முறையே விளக்கியுள்ளதன் வழி மருதத்தில் மக்கள் வாழ்வியல் முறை தெளிவாக அறியப்படுகிறது. இவற்றை ஆய்வு கண்ணோட்டத்தோடு அணுகியுள்ள விதம் புதிய சிந்தனை நோக்கில் சங்க இலக்கியத்தை வாசிப்போருக்கு துணை செய்யும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

அரசும் நிறுவனமயமாதலும் எனும் தலைப்பு இந்நூலாசிரியரின் ஆய்வுத் திறனில் கூடுதல் கவனம் கொள்ளச் செய்கிறது. பரத்தமையும் பண்பாட்டு உறவும் எனும் தலைப்பில் பரத்தையர் குறித்து எழுதியிருப்பது புதிய சிந்தனையை தருகிறது.

*எழிலும் புனைவும் கலையும் கூட்டி இன்பம் வழங்கி விலைபெறும் பரத்தையர், இதனொடு தொடர்ந்து வேறு பணிகளையும் அரசியல் நிலையில் ஆற்றினர். பாரதம், இராமாயணம் போன்ற வடமொழிக் காவியங்களிலும் கௌடில்யரது அர்த்தசாஸ்திரம் போன்ற பொருளியல் நூல்களிலும் பரத்தையருக்கு உரியனவாகப் பல பணிகள் குறிக்கப் பெறுகின்றன. போர்க்களத்தில் வெற்றி விளைவிக்கும் வீரர்க்கு இன்பம் வழக்கும் பணியை மேற்கொண்டனர். அரசனது வெற்றியை எதிரேற்பதிலும், சிறந்த அரச விருந்தினரை வரவேற்பதிலும் குறிப்பிடத்தக்க இடம்பெற்றனர். பிற மொழியறிவும், குறிப்பு மொழிப் பயிற்சியும் பெற்ற பரத்தையரும் இருந்தனர். கொடியர், கொலைஞர், அயல்நாட்டு ஒற்றர் போன்றோரை ஒற்றாடும் பணியையும் பரத்தையர் ஆற்றினர்.*

மேலும் 'மருதமும் வரலாற்றுப் பதிவுகளும்' எனும் தலைப்பில்,

*ஆரியர் அலறத் தாக்கி, பேர் இசைத்*
*தொன்று முதிர் வடவரை வணங்கு வில் பொறித்து*
*வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் (அகம். 396)*

ஆரியர், வடவர் என குறிக்கப்படுவது கனகர், விஜயர் என்ற இரு ஆரிய மன்னர்களைத்தான் என்பதையும், அவர்கள் தமிழரையும், தமிழரின் பண்பாட்டையும் இழித்தும், பழித்தும் பேசியதால் செங்குட்டுவன் அவர்களைப் பிணித்து அவர்கள் தலையிலே இமயத்தின் கல்லேற்றிக் கொண்டு வந்து சேர நாட்டில் கண்ணகிக்குக் கோயில் எழுப்பித்தான் என்பதையும் பின்னர் வந்த வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்துள்ளதை நாம் அறிவோம். இது போன்ற வரலாற்று செய்திகளும் ஆங்காங்கு காணமுடிகிறது. பல்நோக்கு சிந்தனைகளை வாசிப்பின் ஊடாகத் தந்துள்ள தமிழாசிரியர் பாலுச்சாமி அவர்களுக்கு என் பாராட்டுக்கள்.

தமிழ் ஆர்வலர்களும் தமிழ்ப் பண்பாட்டுத் தேடல் உள்ளவர்களும் படித்தறிய வேண்டிய நூல் இதுவாகும்.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இரா. சிவக்குமார் இ.ஆ.ப. அவர்களுக்கும்

இச்சொற்பொழிவின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# பொருளடக்கம்



## ஆசிரியர் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் பெயர் | : | எ. பாலுச்சாமி |
| பிறப்பு | : | இராமநாதபுரம் மாவட்டம்,<br>வெங்கட்டன்குறிச்சி கிராமம் |
| பள்ளிப்படிப்பு | : | பரமக்குடி, ராஜா சேதுபதி அரசினர் ஆண்கள் மேல்நிலைப்பள்ளி |
| கல்லூரிப்படிப்பு | : | புதுமுக வகுப்பு – இளையான்குடி டாக்டர் ஜாகிர்உசேன் கல்லூரி<br>பி.ஏ. தமிழ், மதுரை தியாகராசர் கல்லூரி<br>எம்.ஏ. தமிழ், மதுரை காமராசர பல்கலைக் கழகம்<br>பி.எட்., மதுரை தியாகராசர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி<br>எம்.எட்., அண்ணாமலை பல்கலைக்கழக தொலைதூரக் கல்வி<br>எம்.ஃபில்., மதுரைப் பல்கலைக்கழக தொலைதூரக் கல்வி |
| பணிநிலை | : | 1980–82இல் சென்னை தினமலர் நாளிதழில் செய்தியாளர் பணி.<br>1982–97இல் அரசு ஆதிதிராவிடர் நலத்துறை மேல்நிலைப் பள்ளிகளில் முதுகலைப் பட்டதாரி ஆசிரியப்பணி<br>1997 முதல் தலைமையாசிரியர் பணி |

# மருதத்தில் மக்கள் வாழ்வியல்

## தோற்றுவாய்

உரையாசிரியர்கள் தொடங்கி இன்றையப் பேராசிரியர்கள் வரையில் பல அறிஞர்கள் மருதப்பாடல்களை ஆய்வுக்குட்படுத்தி யுள்ளனர். மருதப் பாடல்களின் பல்வேறு கூறுகளும் அறிஞர் பெரு மக்களால் ஆய்வு செய்யப்பட்டிருப்பினும் மருதப்பாடல்களில் காட்டப் படும் மக்களின் வாழ்வியல் கூறுகள் போதுமான அளவுக்கு வெளிக் கொணரப்படவில்லை என்ற எண்ணத்தின் விளைவுதான் இக்கட்டுரை.

எட்டுத்தொகைப் பாடல்களின் நற்றிணையில் 32; குறுந் தொகையில் 48; ஐங்குறுநூற்றில் 100; பரிபாடலில் 8; கலித் தொகையில் 35; அகநானூற்றில் 40 என்ற எண்ணிக்கையில் மருதப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் ஆய்வுச் சுருக்கம் கருதியும், விரிவஞ்சியும் அகநானூற்றில் இடம்பெறும் 40 பாடல்கள் மட்டுமே இங்கு ஆய்வுக்கு முதன்மையாக எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இப்பாடல்களின் வாயிலாக மருதநிலத்தில் வாழ்ந்த பல்வேறு மக்களும், அவர்களின் வாழ்வியல் தன்மையும் ஆராயப்படுகின்றன. கருதுகோளை அடைவதற்கு மூலநூலிலிருந்தும் துணை நூல்களிலிருந்தும் தரவுகள் எடுத்தாளப்படுகின்றன.

பரந்துபட்ட சங்கப் பாடல்களில் மருதப்பாடல்களை மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக்கொண்டதன் நோக்கம் என்னவெனில் ஆணும் பெண்ணும் முறையாக இணைந்து வாழச் செய்யப்படும் "திருமணம்" என்கிற உயரிய நிகழ்வு இப்பாடல்களில் தான் பதிவு செய்யப்படுவதோடு குடும்ப உருவாக்கமும், அரசு உருவாக்கமும் ஒரு நிறுவன அமைப்பாக வளர்ந்து நிலைபெற்ற தன்மை இப்பாடல்களில்தான் வெளிப்படுகின்றன என்பதாலும், நிலஉரிமையாளன் – நிலத்தில் உழைப்பவன் என்கின்ற வர்க்க அடிப்படையிலான சமுதாயம் இப்பாடல்களில்தான் முதன் முதலாகக் காட்டப்படுகின்றன என்பதாலும்தான். அதோடு மட்டுமில்லாமல் சமுதாயம் நிலை பெற்றிருப்பதற்குத் தேவையான உணவு உற்பத்தியைப் பெரும்பாலான மக்கள் மேற்கொண்டிருக்க அபரிமிதமான உற்பத்தியில் கிடைத்த உபரியை உரிமையாக்கிக் கொண்ட ஒரு சிலர் – குறிப்பாக அனைத்துப் புலவர்களாலும் காட்டப்படும் தலைமகன் பரத்தையரை

நாடிச் சென்றதும் இப்பாடல்களில்தான் காட்டப்படுகின்றது. ஆணாதிக்க நிலவுடைமைச் சமுதாயத்தில் பொருளியல் வளத்திற்கும் சமுதாய ஒழுக்கக் கேட்டிற்கும் (நெறிபிறழ்விற்கும்) உள்ள தொடர்பு இதனால் அறியப்படுகிறது.

சங்க இலக்கியப் பாக்கள் பலவும் – மருதப்பாடல்கள் உட்பட சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் வாழ்ந்த மன்னர்களை தலை மக்களாகக் கொண்டு பாடியவையாகும். மன்னர்களைப் பாடிய இலக்கியத்தில் மக்களைப் பற்றிய வரலாறும் தவிர்க்க முடியாத அளவுக்கு இடம்பெற்ற விடுவதைக் காண்கிறோம். அவற்றைத் துருவித் தொகுப்பதன் மூலமே சங்ககாலச் சமுதாயத்தில் குறிப்பாக மருத நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் தன்மையை ஓரளவுக்கேனும் வெளிக்கொணர முடியும். அதை நோக்கிப் பயணிக்கவே இவ்வாய்வு.

# மண்ணும் மக்களும்

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்* (தொல். பொருள் 5)

என முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களைக் குறிப்பிடுவார் தொல்காப்பியர். சங்ககாலப் புலவரான ஔவையாரும் தனது புறநானூற்றுப் பாடல் ஒன்றில் தமிழகம் நால்வகை நில அமைப்பைக் கொண்டது என்பதைப் பதிவு செய்வார்.

*நாடா கொன்றோ காடா கொன்றோ*
*அவலா கொன்றோ மிசையா கொன்றோ* (புறம். 187)

என்பதில் நாடு – மருதம்; காடு – முல்லை; அவல் – நெய்தல்; மிசை – குறிஞ்சி என நானிலம் சுட்டப்படுகின்றது.

இவற்றில் குறிஞ்சி நிலத்தில் வேட்டைச் சமூக அமைப்பும், முல்லை நிலத்தில் கால்நடைச் சமூக அமைப்பும், மருத நிலத்தில் வேளாண் சமூக அமைப்பும், நெய்தல் நிலத்தில் வணிக சமூக அமைப்பும் நிலவியதாகக் கொள்ளலாம். இவற்றில் மருதநிலமும், அங்கு நிலவிய வேளாண் சமூக அமைப்பும் இங்கு ஆய்வுக்குரியதாகிறது.

மருத நிலத்தைத் 'தீம்புனல் உலகம்' எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. ஏனைய மரங்களைக் காட்டிலும் மருதமரங்கள் ஓங்கி உயர்ந்து சிறப்பாக இப்பகுதிகளில் விளங்கியமையாலேயே இந்த நிலப்பகுதிக்கு 'மருதம்' எனப் பெயர் வழங்கலாயிற்று என்பர்.

உணவு தேடும் வாழ்க்கையிலிருந்து மானிட சமூகம் உணவு உற்பத்திக்கு மாறியது இந்த நிலப்பகுதியில்தான். குறிஞ்சி, முல்லை நிலங்களில் வாழ்ந்த மக்கள் தமக்கு வேண்டிய உணவுகளைத் தாமே உற்பத்தி செய்து கொண்டதில்லை. வேட்டைச் சமூகத்தில் விலங்குகளை வேட்டையாடி அவற்றின் மாமிசங்களை எல்லோருமாக பங்கிட்டு உண்டு வந்ததை வரலாறு காட்டுகிறது. சமூகத்தில் அனைவரும் சேர்ந்தேதான் தேட வேண்டும். சேர்ந்தேதான் உண்ண

வேண்டும். ஒன்றும் கிடைக்கவில்லையெனில் சேர்ந்தேதான் பட்டினி கிடக்க வேண்டும். சமூகத்தில் தனிப்பட்ட யாருக்கும் எந்த உரிமையும் கிடையாது. ஆனால் மருத நிலத்தில் மண்வளமும், நீர் வளமும் மிகுதியாக இருந்தமையால் இப்பகுதி வேளாண் உற்பத்திக்கு ஏற்ற வகையில் அமைந்தது.

மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆறுகளில் உண்டான வெள்ள நீர்பெருக்கினையும், மழைக்காலங்களில் கிடைக்கும் நீர்ப் பெருக்கினையும் கண்டு முதலில் துன்புற்றனர். பின்னர் ஆறுகளில் பெருகிவந்த வெள்ள நீரைக் கட்டுப்படுத்தியும், பள்ளமான இடங்களில் ஏரி, குளங்களை அமைத்து நீரைப் பாதுகாத்தும், கிணறுகளை அமைத்து நிலத்தடி நீரைப் பயன்படுத்தியும் உழவுத் தொழிலை மேற்கொண்டு தங்கள் முயற்சியினாலும், உழைப்பினாலும் உயர்வு பெற்றனர். நீர்வளம் நிறைந்த இடங்கள் சதுப்பு நிலங்களாகவும், காடுகளாகவும் இருந்தன. இவற்றை நன்னிலங்களாக மாற்றுவதற்குக் காடுகொன்று நாடாக்கியும், குளந்தொட்டு வளம் பெருக்கியும் மருதநில நாகரிகத்தை வளர்த்தனர்.

காடும் மேடுமாய், செடியும் புதருமாய் இருந்த பகுதியை வயலாக்க இங்கு வாழ்ந்த மக்கள் என்ன பாடுபட்டிருப்பார்கள்; எத்தகு உழைப்பைச் செலுத்தியிருப்பார்கள் என்பதை நம்மால் யூகிக்க முடிகிறது. பயன்படுத்திய நிலத்தை உருவாக்கிய இவர்கள்தானே பண்பாட்டுக்கு உரியவர்களாகவும் இருந்திருப்பார்கள்? பாவாணரின் ஆய்வு முடிவுகள் அதைத்தானே கூறுகின்றன.

பசுமை நிறைந்த வயல்வெளிகளைக் கொண்ட பகுதி மருதநிலம் எனினும் மருதப்பாடல்களில் இயற்கை வருணனை மிகக் குறைவாகவே இடம்பெற்றுள்ளது. எனினும் குறைந்த அளவுக்கான வருணனைப் பகுதிகளிலேயே அந்நிலத்தின் வளம் தெற்றெனத் தெரிகிறது.

என்றும் நீர் வற்றாது வரும் வையையின் மிக்க மணல் பொருந்திய அகன்ற துறையைச் சார்ந்த அழகிய மருதமரம் ஓங்கிய சோலை, கடற்கரையினைக் கரைத்திடும் காவிரியாறு, தீப்போலும் தாமரைப் பூக்களையுடைய நீர்மிக்க வயல், ஆழ்ந்த நீரையுடைய பொய்கையில் ஆண் சங்கானது பெண் சங்கினொடு மணம்புணரும் நீர்நிறைந்த அகன்ற வயல், அழகிய உள்துளையையுடைய வள்ளைக்

கொடி, வண்டுகள் உள்ளிருந்து ஊதும் தாமரையின் குளிர்ந்த மலர், பளிங்கு மணியினைக் கண்டாற் போலும் தெளிந்த குளம், வயல் வெளியெங்கும் பூத்துக்குலுங்கும் ஆம்பல், குவளை மலர்கள் என மருதநிலம் வளம் நிறைந்ததாய் உள்ளது.

*வருபுனல் வையை வார்மணல் அகன்துறை*
*திருமருது ஓங்கிய விரிமலர்கள் கா* (அகம். 36)

*கடற்கரை மெலிக்கும் காவிரி* (அகம். 126)

*கழைநிலை பெறாஅம் காவிரி நீந்தும்*
. . . . . . . . . . . . . . . . . . . . . .
*சுடர்ப்பூந் தாமரை நீர் முதிர் பழனத்து*
*அம்தூம்பு வள்ளை ஆய்கொடி* (அகம். 6)

*நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்*
*தாதின் அல்லி அவிர் இதழ்* (அகம். 16)

*கூன்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற*
*மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்* (அகம். 26)

*ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்*
*கடம்பு விடு பன்மலர்* (அகம். 36)

*எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்துப்*
*பொரி அகைந்தன்ன பொங்குபல் சிறுமீன்* (அகம். 106)

என்றெல்லாம் புலவர்கள் வருணித்திருப்பதைக் காண்கிறோம்.

## நிலப்பாகுபாடு

சங்கப் புலவர்கள் தரும் வருணனையினின்று மருதநிலத்தை ஆறு அடிப்படைப் பகுதிகளாகப் பிரித்துக் காட்டுவர். அவை;

1. பண்படுத்தப்பட்ட விளைநிலமாக அமையும் கழனி
2. வயல்புலத்தை அடுத்தமையும், நீர் தேங்கிய பழனம்
3. ஓடும் புனலைக் காட்டும் யாறு.
4. புனல் தங்கும் பொய்கை என்றினைய நீர்நிலைகள்
5. மரம், செடி, கொடிகள் அடர்ந்த பொழில்
6. மக்கள் உறைதற்குரிதாகப் பொருந்தும் ஊர் என்பன.

இவற்றுடன் நெடுங்கொடி நுடங்கும் கடிநகர், பரத்தை உறையும் சேரி என்ற பிரிவுகளையும் சேர்த்துக் காண வேண்டியுள்ளது.

மருத நிலத்திற்கே முதன்மையாய் அமைவது வயல். இதனையே கழனி என்பர். நன்கு பண்படுத்தப்பட்டுப் பயிரிடுவதற்கு ஏற்ற நன்செய் நிலப்பகுதி கழனி.

தண்துளி ஏற்ற பல உழு செஞ்செய் (அகம். 26),
மலிநீர் அகல் வயல் (அகம். 246),
பல்பூங் கழனி (அகம். 258),
நீர் சூழ் வளவயல் (அகம். 306),
ஒலிகதிர்க் கழனி (அகம். 376)

என்றெல்லாம் வருணிக்கப்படுவதன் வாயிலாக வயலின் வளமையை அறிய முடிகிறது.

வயலை ஒட்டியே வயற்புலத்தை அடுத்த நீர் தேங்கும் பகுதி பழனம் எனப்படும். நீர் நிறைந்த வயல்களிலிருந்து கசியும் நீர் தேங்கியிருக்கும் இப்பழனத்தின் தாமரை, ஆம்பல் போன்ற மலர்கள் நிறைந்து காணப்படும். இடத்திற்கு பழனம் என்று பெயர்.

சுடர்பூந் தாமரை நீர்முதிர் பழனம் (அகம். 6),
எரி அகைந்தன்ன தாமரை பழனம் (அகம். 106),
புள் இமிழ் பழனம் (அகம். 176).
தீம்பெரும் பழனம் (அகம். 286)

என்றெல்லாம் குறிப்பிடப்படும் இப்பகுதி பல நேரங்களில் எருமை உழக்கும் இடமாகவும் வயலாமை தங்கும் இடமாகவும் இருத்தலைக் காண்கிறோம்.

சோழ நாட்டின் காவிரியும் பாண்டிய நாட்டின் வையையும் தமிழகத்தை வளம் கொழக்கச் செய்யும் ஆறுகள். இவ்விரண்டு ஆறுகள் மட்டுமே மருதப் பாடல்களில் காட்டப்பெறுகின்றன.

கழைநிலை பெறாக் காவிரி (அகம். 6),
அந்தண் காவிரி (அகம். 76),
கடற்கரை மெலிக்கும் காவிரி (அகம். 126,
பெருநீர்க் காவிரி (அகம். 226),
அகல் யாறு (அகம். 246),

கழை அளந்து அறியாக் காவிரி (அகம். 326),

நெடுநீர்க் காவிரி (அகம். 396)

என்றெல்லாம் வருணிக்கப்படும் காவிரியின் கரை உச்சியினைப் புதுவெள்ளம் தேய்த்து வருவதைக் காண்கிறோம். இதேபோல்

வருபுனல் வையை (அகம். 36),

ஏர்தரும் புதுப்புனல் வையை (அகம். 256),

ெ பெருநீர் வையை (அகம். 296)

என்றெல்லாம் வையையாற்றின் சிறப்பு கூறப்படுகின்றது.

தெளிந்த நீர்ப்பரப்பையுடையது பொய்கை. இப்பொய்கையின் குளிர்ந்த மலர்கள் பூத்துக் குலுங்கி நிற்கும். இங்கு மீன்களும் மிகுதி.

குளிர் மலர்ப்பொய்கை (அகம். 146),

நெடுநீர்ப் பொய்கை (அகம். 246),

நீர் இடும் பொய்கை (அகம். 276),

பரந்த பொய்கை (அகம். 306),

தீம்பெரும் பொய்கை (அகம். 316)

என்றெல்லாம் வருணிக்கப்படும் பொய்கை இன்றைய நிலையில் குளம், குட்டை என்று அழைக்கப்படுகின்றது.

மரம், செடி, கொடிகள், அடர்ந்த சோலைக்குப் பொழில் என்று பெயர். ஓங்கி உயர்ந்த மருத மரங்களும், காஞ்சி மரங்களும் இங்கு மிகுதியாகக் காணப்படும்.

மருது ஓங்கிய விரிமலர்க் கா (அகம். 36)

எனவும்,

தாது ஆர் காஞ்சித் தண்பொழில் (அகம். 246)

எனவும் இதனைப் புலவர் குறிப்பிடுவர்.

**ஊர்**

மக்கள் வாழுமிடம் ஊர் எனப்படும். பல சிற்றூர்களும், சில பேரூர்களும் இருந்தன என்பதை அறிகிறோம். மருதப் பாடல்களில் தலைவன் "ஊரன்" என்றே சுட்டப்படுகின்றான். ஊரை உடையவன், ஊருக்குக் கிழவன் என்று பொருள்படும் அச்சொல் பிற்காலத்தில்

வழக்கிற்கு வந்த 'உடையான்' என்னும் சொல்லை ஒத்ததாகும் என்பார் அறிஞர் க. கைலாசபதி.

வளம் கேழ் ஊர் (அகம். 26),
கயம் உழக்கும் பூக்கேழ் ஊர் (அகம். 36),
வண்டு ஊது பணிமலர் ஆடும் ஊர் (அகம். 46),
தண்துறை ஊர் (அகம். 76),
துறைகேழ் ஊர் (அகம். 106),
பாய்புனல் ஊர் (அகம். 116),
நீர்வளம் மிக்க ஊர் (அகம். 146),
ஆம்பல் மெல் அடை ஒடுங்கும் ஊர் (அகம். 256)

என்றளவில் வருணிக்கப்படும் ஊர், தலைவனுக்கு உரிமையானது என்பதை அறியும்போது மருதநிலத் தலைவனின் வளமை புலப்படுகிறது.

**நகர்**

பல ஊர்களுக்கும் மையப்படுத்தப்பட்ட இடமாக நகர் உருவாகியிருக்கலாம். ஊர் பண்பாட்டின் அடையாளமாக விளங்க நகர் நாகரிகத்தின் சின்னமாக விளங்கியிருக்கலாம். உலகம் முழுவதுமே ஆற்றோரங்களில் நகரங்கள் உருவாகி நாகரிங்கள் வளர்ந்ததாக வரலாற்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். நகர்— நகரிகம்— நாகரிகம் என்று இதன் வளர்நிலையைச் சுட்டுவர். பண்பாட்டை Culture எனவும், நாகரிகத்தை Civilization எனவும் ஆங்கிலத்தில் குறிப்பிடுவர். இவை இரண்டுமே தோன்றி வளர்ந்த இடம் மருதநிலப் பகுதி எனக்கொள்வதில் தவறில்லை.

மன்னர்களும், செல்வந்தர்களும் வாழ்ந்த இத்தகைய நகரங்கள் பாக்கம் எனவும் அழைக்கப்பட்டன. இங்கு தேரோடும் வீதிகளும், மாடமாளிகைகளும், ஆறு போன்ற அகன்ற நெடுந் தெருக்களும் அமைந்திருந்தன. காவலும் மிக்கிருக்கும் எனவே இதனை கடிநகர் என்றனர்.

நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கம் (அகம். 196)

எனவும்,

நெடுங்கொடி நுடங்கும் அட்டவாயில் (அகம். 326)

எனவும் கூறப்படும் செய்திகளை நோக்க, பல்வேறு குடியிருப்புகள் சிதைந்து மையப்படுத்தப்பட்ட நகரங்கள் உருவான காலக்கட்டம் இது என்பதை அறிகிறோம்.

**சேரி**

பலர் சேர்ந்து வாழும் இடமே சேரி எனப்படும். பார்ப்பனச் சேரி, வாணிகச் சேரி, ஊருக்குப் புறத்தே அமைந்த புறச்சேரி பற்றி யெல்லாம் அறிகிறோம். நாளடைவில் சமூகத்தில் ஒதுக்கப்பட்டவர்கள் குடியிருக்கும் இடமே சேரி எனலாயிற்று.

மருதப்பாடல்களில் பரத்தை குடியிருக்கும் இடம் சேரி எனவும், தலைவன் குடியிருக்கும் இடம் ஊர் எனவும் குறிக்கப் படுவதை நோக்கினால் இவ்விருவருக்குமான சமூக ஏற்றத் தாழ்வு புலப்படும்.

*மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்க*
*தண்துறை ஊரன் எம்சேரி வந்தென* (அகம். 76)

*. . . . . . . . . . . . . . . . நாரைதன்*
*அடிஅறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்*
*கடிசிலம் புகூடம் கள்வன் போலச்*
*சாஅய் ஒதுங்கும் துறைகேழ் ஊரனொடு*
*ஆவது ஆக! இனி நாண் உண்டோ?*
*வருகதில் அம்ம எம் சேரி சேர* (அகம். 276)

ஊரையுடைய தலைவன் எம்மை நாடி எம் சேரிக்கே வருகிறான் என்று அழுத்தமாகக் கூறும் பரத்தை, அவ்வாறு தலைவனோடு தன்னை இணைத்துக் கூறிக் கொள்வதில் ஒருவிதப் பெருமித உணர்வை அடைகிறாள். தலைவனின் மணி பொருந்திய நெடியதேர் ஒளி பொருந்திய அணிகளையுடைய பரத்தையர் சேரிக் கண் பல நாளும் இயங்குவதைக் காணும் நாம் பரத்தையர் வீட்டுக்கு வந்து செல்லும் தலைவன் எப்படிப்பட்ட சமூக பொருளாதாரப் பின்னணியை உடையவன் என்பதை அறிகிறோம்.

*கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடுந்தேர்*
*ஒள்ளிழை மகளிர் சேரிப் பல்நாள்*
*இயங்கல் ஆனாது ஆயின்* (மருதம் 146)

**மக்கள் பிரிவினர்**

அன்றே சமூக ஏற்றத்தாழ்வுகள் வந்துவிட்டன. அதையொட்டி மக்களும் பல பிரிவினராக வாழத் தலைப்பட்டனர். தமிழ் இலக்கணம் யாத்த தொல்காப்பியரும் சமூக ஏற்றத்தாழ்வுகள் குறித்துப் பல சூத்திரங்களில் கூறுகிறார். நால்வகை நிலங்களைப் பற்றிப் பேசுமிடத்து திணைப் பெயர்களைக் குலப்பெயர்கள் என்றும் தலை மக்கள் பெயர்கள் என்றும் பாகுபாடு செய்கின்றார்.

> *இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும்*
> *உரியது ஆகும் என்மனார் புலவர்* (தொல். 959)
>
> *அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்*
> *கடிவரை இல புறத்து என்மனார் புலவர்* (தொல். 971)

போன்ற நூற்பாக்கள் மக்களை உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்று வகைப்படுத்துவதைக் காண்கிறோம்.

பின்வந்த உரையாசிரியர்கள் மருத நிலத்தில் வழங்கும் குலப் பெயர்களாகக் களமர், உழவர், கடையர், கடைசியர், உழத்தியர் என்பன வற்றைக் கூறிவிட்டு, அந்நிலத்து உரிப்பொருளுக்குரிய தலைமக்கள் பெயர்களாக மகிழ்நன், மனையோன், ஊரன் என்பவற்றைக் காட்டுவர்.

**குலமக்கள்**

தொல்காப்பியராலும், மருதப் பாடல்களைப் பாடிய புலவர் களாலும் காட்டப்பெறும் இக்குலமக்கள் உரிப்பொருளுக்கு உரியவர்களாக இல்லாவிட்டாலும் சமுதாயத்தில் இவர்களே பெரும்பான்மையோர். தலைமக்களைச் சிறப்பித்துப் பாடிய பாடல்களில் தவிர்க்கவியலாது இவர்களும் இடம்பெற்றார்களே தவிர, இவர்களின் வாழ்க்கை பாடப்படவில்லை. இவர்களின் வாழ்க்கையைப் பாடுவதும் புலவர்களின் நோக்கமில்லை. ஐந்திணைக் காதல் கவிதைகளில் அடிமைகள், ஏவலர், பணியாட்களைக் கதை மாந்தராகச் சித்திரிக்கக் கூடாது என்ற தொல்காப்பிய விதி அன்றையப் புலவர்களால் அப்படியே பின்பற்றப்பட்டது. ஆனால் இவர்களே சமுதாயத்தின் உற்பத்தி சக்திகளாய்த் திகழ்ந்த காரணத்தால் சமூக வளர்ச்சியிலும், மாற்றத்திலும் இவர்களின் பங்களிப்பு முக்கியமானது என்பதை மறந்துவிடுவதற்கில்லை.

**தலைமக்கள்**

ஊடலும் ஊடல் நிமித்தமும் என்ற மருதத்திணையின் உரிப்பொருளுக்குரியவர்கள் இவர்கள். இவர்களின் செவ்வச் செழிப்பும், படை வலிமையும் தேரேறிப் பரத்தையர் சேரிகளை நாடிச் செல்லும் ஒழுக்கமும் மருதப்பாடல்களில் பேசப்படுகின்றன.

இங்கு தலைவியானவர் தம் கணவனின் பரத்தையொழுக்கத்தை அறிந்தும் வெகுண்டெழாமல் ஊடுவதோடு அமைதியாகி விடுகிறாள்.

உயர்குடியினர், சமூகத்தின் மேல்வர்க்கத்தினர் ஆகியோரைத் தான் சங்கப் புலவர்களும், தொல்காப்பியமும் தலைமை மாந்தராக இலக்கியத்தில் படைத்தனர் என்னும் கைலாசபதியின் கருத்து இங்கே எண்ணத்தக்கது. காப்பியப் புலவன் இளங்கோவும் இதற்கு விதிவிலக்கல்ல.

**உணவு பழக்கம்**

நாட்டில் ஒவ்வொரு பகுதியிலும் ஆங்காங்கே விளையும் தானியம், காய், கிழங்கு, கீரை, கனி முதலியவற்றை அப்பகுதி மக்கள் உணவாகக் கொண்டனர்.

மருத நிலத்தில் செந்நெல்லும் வெண்ணெல்லும் மிகுதியாக விளைவிக்கப்பட்டன. அவற்றாலான சோற்றை மிதவை என்றும் அழைத்தனர். உளுந்து, அவரை முதலிய பருப்பு வகைகளுடன் நெய்யையும் கலந்து விருந்து படைக்கும் முறைமையை மருதப் பாடல்களின் வழி அறிகிறோம். புளிச்சோற்றில் பசுவின் வெண்ணெயை உருக்கி இட்டு உண்டனர் என்பதையும் அறிகிறோம்.

உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற்று அமலை (அகம். 86)

மைப்பு அறப் புழுங்கின் நெய்களி வெண்சோறு (அகம். 136)

. . . . . . . . . . . . . . . . வெஞ்சோறு
தீம்புளிப் பரம்பின் திரள்கனிபெய்து
விடியல் வைகறை இடூஉம் ஊர (அகம். 196)

என வரும் தொடர்களால் பண்டைத் தமிழரின் உணவுப் பழக்கத்தை அறிகிறோம்.

கழனி, பழனம், ஆறு, பொய்கை, பொழில் என்றெல்லாம் வளம் மிக்கதான மருதநிலத்தில் ஊர், நகர், சேரி முதலிய வாழிடங்களை அமைத்துக் கொண்டு களமர், உழவர், கடையர், கடைசியர், உழத்தியர் முதலான குலமக்களும் ஊரன், நாடன், மகிழ்நன் முதலான தலைமக்களும் தமது வாழ்வை மேற்கொண்டிருந்தனர் என்பதனை இதன்வழி அறியலாம். வளம்மிக்கதான மருதநில மக்கள் செந்நெல், வெண்ணெல் அரிசியிலான சோற்றையும் உளுந்தாலான களியையும் உணவாகக் கொண்டிருந்தனர் என்பதையும் அறிகிறோம்.

# உழைப்பும் ஓய்வும்

மருதநிலத்து மக்கள் பெரும்பாலும் உழவுத் தொழிலையே சார்ந்திருந்த காரணத்தால் இவர்களின் உழைப்பு என்பது உழவு உற்பத்தி தொடர்பான உழைப்பாகவே இருந்தது. இவர்கள் கிடைக்கக்கூடிய ஓய்வு நேரத்தைத் தங்களின் சோர்வைப் போக்கிக் கொள்வதற்கும், பயனுள்ள வழிகளிலும் பயன்படுத்திக் கொண்டனர். இங்கு அடிப்படை மக்களுடைய உழைப்பும் ஓய்வும் ஒருவகையாகவும் மேட்டுக்குடி மக்களின் உழைப்பும் ஓய்வும் வேறு வகையாகவும் இருத்தலைக் காண்கிறோம். அதற்கு முன்னர் மருதப் பாடல்களில் காணப்படும் வேளாண் சமூக அமைப்பு எவ்வாறு இருந்தது என்பதை அறியலாம்.

## வேளாண் சமூக அமைப்பு

குறிஞ்சி, முல்லை நிலங்களில் வாழ்ந்த மக்களுக்கும், மருத நிலத்தில் வாழ்ந்த மக்களுக்கும் அடிப்படையில் பெரிய வேறுபாடு உண்டு. அவர்கள் வேட்டையாடியும், கால்நடைகளை வளர்த்தும் நாடோடி வாழ்க்கை வாழ்ந்தார்கள். ஒரு குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட காலத்திற்கு நிலையாகத் தங்கியிருக்க அவர்களுக்கு வாய்ப்பில்லை. சிறு சிறு குடும்பமாக வாழத் தலைப்பட்டார்களே தவிர குடும்ப அமைப்பு ஒரு நிறுவனமாக உருக்கொள்ளவில்லை. உணவு தேடும் வாழ்க்கையிலிருந்த அவர்கள் கிடைத்த உணவை எல்லோருக்குமாகப் பங்கிட்டுக் கொண்டனர். சிந்தையில் பொதுமை யுணர்வும், தமக்கென்றும், தமது வழித்தோன்றல்களுக்கென்றும் சேர்த்து வைக்க எண்ணாத உயர்குணமும் அம்மக்களிடையே இருந்தன.

இயற்கையைத் தமது ஆற்றலுடன் பயன்படுத்திக் கொள்ள தெரிந்த மருதநில மக்கள் காட்டைத் திருத்தி கழனியாக்கினர். ஆற்றை திருப்பி நீரைத் தேக்கினர். வேளாண்மையில் ஈடுபட்டனர். தங்களின் விளை நிலங்களுக்கு அருகிலேயே சற்று மேடான பகுதிகளில் ஊர்களை உருவாக்கிக்கொண்டு குடும்பம் குடும்பமாக வாழத் தலைப்பட்டனர். உணவைத் தேடி வாழ்ந்த குறிஞ்சி, முல்லை

நிலமக்களைப் போலல்லாமல் இவர்கள் உணவை உற்பத்தி செய்தனர். உணவு உற்பத்தி என்பது ஓரிரு நாளில் நடந்து முடிவதல்ல. அதற்கு பல நாட்கள், பல மாதங்கள் காத்திருக்க வேண்டும். அதனால் உற்பத்தியில் ஈடுபடும் அம்மக்கள் இடம்பெயர்வது என்பது சாத்திய மற்றது. எனவேதான் ஒரே இடத்தில் நிலையாகத் தங்க தலைப்பட்டனர்.

தமிழர்கள் என்று உழவுத் தொழிலைச் செய்யக் கற்றுக்கொண்டார்களோ அன்றே பாசன முறையையும் பயன்படுத்தத் தொடங்கினர். வேளாண் தொழிலுக்கு இன்றியமையாது தேவைப்படும் நீரை பாழாக்காமல் போற்றிப் பாதுகாக்கத் தலைப்பட்டனர். ஆறுகளில் பெருக்கெடுத்து ஓடிவரும் நீரைத் தடுத்து நிறுத்த அணைகளைக் கட்டி ஏரிகளையும் குளங்களையும் அமைத்து நீரை அவற்றுக்கு கொண்டு சென்றனர். பின்னர் கால்வாய் வழியாக நீரினை வயல்களுக்குக் கொண்டு சென்று பாய்ச்சும் பணியினை செய்தனர். இவ்வாறு நீர் மேலாண்மையில் இம்மக்கள் சிறந்திருந்த காரணத்தால் விளைச்சல் அதிகமானது.

தங்களின் தேவைக்குமேல் உற்பத்தி அதிகரிக்கும்போது அதனால் ஏற்பட்ட உபரியைச் சேர்த்து வைத்தனர். இப்படிச் சேர்ந்த உபரி நாளடைவில் அவ்வக் குடும்பத்தின் சொத்தாயிற்று. வலிமையும், திறனும் உள்ள ஒரு சிலர் தங்களின் விளைநிலங்களை விரிவுபடுத்தினர். நெல்லும் கரும்பும் பயிரிட்டனர். உற்பத்தி அதிகரிக்க அதிகரிக்க அபரிதமான உபரி சேர்ந்தது. உபரி சேரச் சேர மற்றவர்களை விட அவர்கள் மேல்நிலைக்கு வந்தனர்.

மேல்நிலைக்கு வந்தவர்கள் அதிக நிலங்களை அபகரித்துக் கொண்டனர். இவர்கள் 'நிலக்கிழார்' என அழைக்கப்பட்டனர். தங்களின் நிலங்களைப் பாதுகாக்க அடியாள் படைகளை அமைத்துக் கொண்டனர். படைகளுக்கு போர்ப் பயிற்சி அளிக்கப்பட்டது. படைகளின் வலிமையால் நிலக்கிழார்களாக இருந்த பலர் சிறுசிறு பிரதேசங்களைத் தமது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தனர்.

சிறுசிற பிரதேசங்களில் குறுநில மன்னர்கள் தோன்றினர். பெரிய ஆறுகளின் நீரை முழுவதும் பரந்த அளவு நிலத்தில் பாய்ச்சி

உழவுத் தொழில் செய்யவும், பல பகுதியினரையும் ஒருங்கு உழவுத் தொழிலிலே ஈடுபடுத்தவும் மத்திய ஆட்சி தேவையாயிற்று. பரந்த நிலப்பரப்பின் தலைவர்களாய் இருந்தவர்கள் முடியுடை மன்னர்களானார்கள். எந்தப் பகுதி விளைச்சல் அதிகம் கண்டு தானியம் மிஞ்சியதோ அப்பகுதி வலிமையுடையதாயிற்று. பக்கத்திலுள்ள வளர்ச்சியடையாத பகுதிகளைப் போரின் மூலம் தன் ஆட்சிக்குக்கீழ் கொணர்ந்தது. இவ்வாறு நூற்றுக்கணக்கான குறுநில மன்னர்கள் சேர, சோழ, பாண்டியரது ஆட்சிக்கு உட்பட்டனர். தனித்தனியே வாழ்ந்த மலை நாட்டினரும், காட்டு சாதியினரும் பயிர்செய்து உற்பத்திச் சக்திகளாய் வளர்ந்துவிட்ட மருதநிலத்தவரது ஆதிக்கத்திற்கு உட்பட்டனர் என்பார் நா. வானமாமலை.

இந்த சமூகத்தில் தமிழ் மக்கள் உற்பத்திச் சக்திகளுக்கும், தங்களுக்குமுள்ள உறவு காரணமாக இரு பிரிவாகப் பிரிந்தனர். ஒன்று 'நிலக்கிழார்' அல்லது நிலவுடைமையாளர். மற்றொரு பிரிவினர் அவற்றில் உழைத்துப் பிழைக்கும் உழவர்கள். இச் சமூகத்தில் வர்க்கப் பிரிவினையும், முரண்பாடும் தோன்றிவிட்டன என்றும் கூறலாம்.

### வர்க்கப் பிரிவுகள்

சமூகவியலறிஞர்கள் மனித சமுதாயத்தை 1. காட்டுமிராண்டி நிலை, 2. அநாகரிக நிலை, 3. நாகரிக நிலை என வகைப்படுத்துவர். உபயோகத்திற்கு தயாராகவிருந்த இயற்கைப் பொருள்களை உபயோகிப்பதே மிகப் பெரும்பான்மையாயிருந்த ஒரு நிலையே காட்டுமிராண்டி நிலை. கால்நடை வளர்ப்பு, நிலச்சாகுபடி பற்றிய அறிவு பெறப்பட்ட நிலை அநாகரிக நிலை, இயற்கைப் பொருட்களை மேலும் பயன்படுத்திக் கொள்வது பற்றியும், கம்மியத் தொழிலைப் பற்றியும், கலையைப் பற்றியும் அறிவு பெறப்பட்ட நிலை நாகரிக நிலை என எங்கெல்ஸ் வரையறுப்பார்.

இந்த நாகரிகச் சமுதாயத்தின் தோற்ற நிலையில்தான் தனியாள் உரிமை இடம்பெறத் தொடங்கிற்று. மேலும் தமிழகத்தில் சமனற்ற நிலப்பரப்பின் விளைவாகத் தோன்றிய சமனற்ற பகிர்வு களாலும், சமனற்ற வளர்ச்சியினாலும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் தோன்றின. இவ்வகையில் நிலவுரிமையுடையோர், நிலவுரிமையற்ற

உழைக்கும் விவசாயப் பிரிவினர் என்ற வேறுபாடுகளும் இடம்பெற்றன.

நிலவுரிமையற்ற விவசாய உழைப்பாளர்கள் செந்நெல் வினைஞர், நோன்ஞான் வினைஞர், வெந்நெல் அறிஞர், கழனி உழவர், கலிமகிழ் உழவர் என அகநானூற்று மருதப்பாக்களிலும் கைவினை மாக்கள், பகடு புறந்தருநர், மனைக்களர் எனக் குறுந்தொகை மற்றும் புறநானூற்றுப் பாக்களிலும் சுட்டப்படுகின்றனர்.

இவர்கள் உழுதல், விதைத்தல், களை வெட்டல், கரும்பு அறுத்தல், நெல் அறுத்தல், நெற்சூடு தொகுத்தல், நெற்சூடு சுமத்தல், கடாவிடுதல், நெல்தூவுதல், வைக்கோல் போர் குவித்தல், வயல் வேலைகளைச் செய்தல் முதலான உழவு தொடர்பான தொழில்களைச் செய்துள்ளனர்.

ஒரு களத்தில் உழவர்கள் நெல்தூற்றியபோது பறந்து சென்ற துரும்புகள் அருகேயுள்ள உப்பளத்தில் பாத்திகளில் படர்ந்ததால் உப்பளப் பாத்திகளிலுள்ள வெள்ளுப்பு கெட்டது. இதனால் ஆத்திரமுற்ற பரதவர்கள் உழவர்களோடு சண்டையிட்டு இரு தரப்பாரும் சேறுகளை வாரியடித்துக் கொண்டனர். உடனே மருத நிலத்தைச் சேர்ந்த நரைமூதாளர் சண்டையை விலக்கிப் பரதவர்களுக்குக் கள்கொடுத்து சமாதானம் செய்த காட்சி அகப்பாடலில் இடம்பெற்றுள்ளது.

*தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய*
*நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்புஅழித்து*
*கள்ஆர் களமர் பகடுதலை மாற்றி*
*கடுங்காற்று எறியப் போகிய துரும்புடன்*
*காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்*
*இருநீர்ப் பரப்பின் பனிந்துறைப் பரதவர்*
*தீம்பொழி வெள்ளுப்பு சிதைதலின் சினைஇ*
*கழனி உழவரொடு மாறு எதிர்ந்து மயங்கி*
*இருஞ்சேற்று அள்ளல் எறிசெருக் கண்டு*
*நரைமூதாளர் கைபிணி விடுத்து*
*நனைமுதிர் தேறல் நுழையர்க்கு ஈயும்* (அகம். 366)

**உடைமையும் உரிமையும்**

இங்கு காட்டப்படும் உழவர்கள் களத்தின்கண் வரும் இரவலர் முதலியவர்களுக்கு நெல்லை வாரி வழங்குவர்.

*பெருங்களம் தொகுத்த உழவர் போல*
*இரந்தோர் வருங்கலம் மல்க வீசி* (அகம். 30)

எனவரும் அகப்பாடல் பகுதி உழவர்களின் கொடைத்தன்மைக்குச் சான்று பகர்கிறது.

எவருடைய நிலத்திலோ கூலிக்கு வேலை செய்யும் உழவுத் தொழிலாளர்கள் பிறருக்கு (நிலவுடைமையாளருக்கு) உரிமையான நெல்லை இரவலர்க்கு ஈந்தார்களா? அத்தகைய உரிமை அவர்களுக்கு இருந்ததா? என்ற அய்யப்பாடு இங்கு தோன்றுகிறது. எனவே இவர்கள் அந்தப் பொருளுக்கும் உடையவர்களாய் இருந்திருத்தல் வேண்டும் என எண்ணலாம். இங்கு காட்டப்படும் உழவர் சிறு நில உடைமையாளராய் இருந்திருக்க வாய்ப்பு உள்ளது.

இக்காலகட்டத்தில் வர்க்கப் பிரிவுகள் தோன்றிவிட்டன எனினும் விவசாய வேலைகள் எதையுமே அறியாத நில உரிமையாளர்கள் எனவும், ஒரு சிறிதளவு நிலத்திற்கும் உரிமையற்ற கூலி விவசாயத் தொழிலாளர்கள் எனவும், மிகப்பெரிய வர்க்க இடைவெளி தோன்றியிருக்க வாய்ப்பில்லை என்றே கருதலாம்.

**ஓய்வில் வேறுபாடு**

ஓய்வு என்பது பலருக்கு பயனுள்ள பொழுதுபோக்கு. ஒரு சிலருக்கு ஊதாரித்தனம் மிக்க உல்லாசப் பொழுதுபோக்கு மருத நிலத்து மக்களின் ஓய்வு நேரமும் இவ்விருமுறையில் அமைந்தன என்பதை அறிகிறோம்.

உழைக்கும் குலமக்களையே அடிப்படை மக்கள் என்கிறோம். வெண்நெல் அரிகின்ற மக்கள் நீர்த் தாவரமான நீர் முள்ளிச் செடிகள் நிறைந்த மடுவிலே மீன் பிடித்து வந்து களத்துமேட்டில் மாமர நிழலில் சமைத்து உண்டு ஓய்வெடுத்தனர்.

*மணிமருள் மாற முள்ளி அமன்ற*
*துணிநீர் இலஞ்சிக் கொண்ட பெருமீன்*
*அரிநிறக் கொழுங்குறை வெளவினர் மாந்தி*
*வெண்ணெல் அரிநர்* (அகம். 236)

மற்றோரிடத்தில் கள்ளுண்ட உழவர்கள் காஞ்சி மரத்தின் துண்டுகளை வரிசையாக நட்டு, கரும்பின் கழிகளைக் குறுக்காகக் கட்டி பெரிய நெற்பயிரையுடைய வயற்பள்ளங்களில் நீரைத்தேக்கி, வளைந்த அணையின் மேல் வழியும்படி செய்து மீன்பிடிக்க முயல்வர். நீரின்மேல் ஏறிவரும் கயல்மீனைப் பெறக்கருதிக் கொக்கின் சேவலானது ஆவலோடு காத்து நிற்கும்

*கள்ஆர் உவகைக் கலிமகிழ் உழவர்*
*காஞ்சிஅம் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை*
*மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து*
*பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி* (அகம். 346)

இன்னும் சிலர் வேலை செய்த அலுப்புத்தீர, ஓலைக் கூடையில் ஊறவைத்த மாங்காயைத் தொட்டுக் கொண்டு குளத்தில் தண்ணீர் குடிக்கும் மாட்டைப் போலக் கொள்ளும், பயறும் கலந்த கூழைப் போதுமான அளவிற்குக் குடித்துவிட்டு மருதமர நிழலில் மாடுகளுடன் அமர்ந்து ஓய்வெடுத்தனர்.

*கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்*
. . . . . . . . . . . . . . . . . . . . .
*வைகுபுலர் விடியல் வைபெயர்த்து ஆட்டித்*
*தொழில் செருக்கு அனந்தர்வீட எழில்தகை*
*வளியொடு சினைஇய வண்தளிர் மாஅத்துக்*
*கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்*
*புளிப்பதன் அமைத்த புதுக்குட மலிர்நிறை*
*வெயில் வெரிந் நிறுத்த பயில் இதழ்ப் பசுங்குடைக்*
*கயம்மண்டு பகட்டின் பருகிக் காண்வரக்*
*கொள்ளொடு பயறுபால் விரைஇ வெள்ளிக்*
*கோல் வரைந்தன்ன வால்அவிழ் மிதவை*
*வாங்குகை தகுத்த பின்றை ஓங்கிய*
*பருதிஅம் குப்பை சுற்றிப் பகல்செல*
*மருத மரநிழல் எருதொடு வதியும்* (அகம். 37)

காட்சியை இங்கு காண்கிறோம். மேற்கண்ட மூன்று காட்சிகளிலும் நாம் காண்பது வெட்டித்தனமான பொழுதுபோக்கை அல்ல. மாறாகத் தங்களின் வயிற்றுப்பாட்டுக்காக ஓய்வு நேரத்தையும் பயனுள்ள முறையில் கழிக்கும் பழக்கத்தை அடித்தட்டு மக்களிடம் காண்கிறோம்.

மேட்டுக்குடி மக்களில் ஆண்கள் யாவரும் தமது ஓய்வு நேரத்தில் தேரூர்ந்து சென்று பரத்தையர் வீடுகளில் கொட்டமடித்தனர். பரத்தையருடன் சேர்ந்து புனலாடியும், வதுவை அயர்ந்தும் காமக்களியாட்டம் நடத்தினர். ஊரிலுள்ள இளைய பெண்கள் எல்லாம் ஒன்றுகூடி வெள்ளியினாலாகிய சிறந்த பூனையுடைய மெல்லிய கரும்பாலாகிய உலக்கையால் கொடி போன்ற நுண்ணிய இடை இங்குமங்கும் அசைய, மீனின் முட்டைபோன்ற வெண்மணலைக் குவித்து காஞ்சிமரத்தின் நிழலில் தம் குடியினர் பெருமைகளைப் பாடிக் குற்றினர் என்பதை அறிகிறோம்.

*வெள்ளி விழுந்தொடி மென்கரும்பு உலக்கை*
*வெள்ளி நுண்இடை வயின்வயின் நுடங்க*
*மீன்சினை அன்ன வெண்மணல் குவைஇக்*
*காஞ்சி நீழல் தமர் வளம் பாடி* (அகம். 286)

மகிழ்ந்ததாக ஓரம்போகியார் தமது பாடலில் பதிவு செய்துள்ளார். இது உழைக்கும் மக்களின் பொழுதுபோக்கிற்கு மாறானதாக உள்ளது.

**ஊர் மன்றம்**

பண்டைக் காலத்தில் கிராமந்தோறும் ஊர்மன்றம் இருந்தது. அதன்மூலம் மக்களிடையே எழுந்த வழக்கினை விசாரித்து நீதி வழங்கும்முறை சிறந்திருந்தது என்பதைப் பல இலக்கியச் சான்றுகள் மூலம் அறியலாம். மருதப்பாடலில் ஒரு காட்சி.

அழகு விளங்கத் தொன்மையான பூக்கள் நிரம்பிய வயல்களையும், கரும்பு நிறைந்த கழனிகளையும் உடைய சிறப்புமிக்க ஊர் கள்ளூர். அங்கு அழகிய நெற்றியையுடைய இளையவள் ஒருத்தியன் அழகிய நலத்தினைக் களவிலே உண்டவன் ஒருவன் பின் அவளைக் கைவிட்டான். அத்தோடு மட்டுமல்லாது அந்த ஒழுக்கமிலான் “இவளை யான் பார்த்தும் அறியேன்” என்று நீதியில்லாத கொடிய சூளினையும் ஊர்மன்றத்திலே உரைத்தான். அவையத்தார் சாட்சிகளை வினவி, அவன் பொய்யன் என்பதை நன்கு உணர்ந்தனர். தளிர் அடர்ந்த பெருமரத்தின் கிளையில் அவனை இறுகக் கட்டிவைத்து அவன் தலையில் தண்ணீரை ஊற்றித் தீர்ப்பு வழங்கினர்.

*தொல்புகழ் நிறைந்த பல்பூங்கழனிக்*
*கரும்பமல் படப்பைப் பெரும் பெயர்க் கள்ளூர்த்*

*திருநுதல் குறுமகள் அணிநலம் வவ்விய*
*அறனிலாளன் அறியேன் என்ற*
*திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்*
*முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி*
*நீறுதலைப் பெய்த* (அகம். 256)

செயல் நம்மை ஆச்சியப்பட வைக்கிறது. நல்லொழுக்கமில்லாதோரைப் பலர் முன்னிலையில் ஒறுத்தல் அக்கால நீதி வழக்காக இருந்ததை இதன்மூலம் அறிகிறோம்.

இதுகாறும் பார்த்தவற்றால் வேட்டை, கால்நடை ஆகிய சமூக அமைப்புகளைவிட வேளாண் சமூக அமைப்பு அடிப்படையில் வேறுபட்டது என்பதையும், முந்தைய சமூகங்களில் காணப்படாத அளவிற்கு இச்சமூக அமைப்பில் தனி உடைமையும், வர்க்க வேறுபாடும் தோன்றிவிட்டன என்பதையும் வர்க்கங்களுக்கிடை யிலான உழைப்பும், ஒய்வும் வேறுபட்டன என்பதையும் அறிகிறோம்.

எனினும் ஒழுக்கக் கேட்டைச் சான்றோர் சமூகம் அனுமதிக்கவில்லை. நல்லொழுக்கமிலாதோரை ஒறுக்கும் நீதி வழங்கும் முறை ஊர்ச் சபையில் இருந்தது என்பதையும் அறிகிறோம்.

# விழாக்களும் சடங்குகளும்

மனிதர்கள் மேற்கொள்ளும் விழாக்களும், சடங்குகளும் அந்த மக்களின் பண்பாட்டை வெளிப்படுத்தக் கூடியவை. மாந்தரிடையேயுள்ள நம்பிக்கையின் அடிப்படையில் இவை நிகழ்த்தப் பெறுகின்றன. மருத நிலத்தில் மக்களால் மேற்கொள்ளப்பட்ட விழாக்கள், சடங்குகள் பற்றி இப்பகுதியில் ஆய்வு செய்யப்படுகிறது.

## விழாக்கள் காட்டும் பண்பாடு

ஒரு நிலத்தில் நடத்தப்படும் விழாக்கள் அந்நிலப் பரப்பில் வாழும் மக்களின் பண்பாட்டை வெளிப்படுத்துவனவாய் இருப்பதைக் காணலாம். மனித வாழ்வில் விழாக்கள் நடப்பதற்கு மனமகிழ்ச்சியுடன் கூடிய ஓய்வு நேரம் அவசியம். ஏனைய நிலப்பகுதியைக் காட்டிலும் மருத நிலப்பகுதியில் வாழும் மக்களுக்கு ஓய்வு நேரம் மிகுதி. வேளாண் சமூக அமைப்பில் அறுவடைக்குப் பின் ஓய்வுதான். மனமகிழ்ச்சியுடன் கூடிய ஓய்வு. இன்றுங்கூட தைத்திருநாள், மாசித் திருநாள், பங்குனி உத்திரம், சித்திரைத் திருவிழா, மாரியம்மன் தீ மிதிவிழா போன்ற விழாக்கள் அறுவடைக்கு பின் தொடர்ந்து நடைபெறுவதைக் காணலாம். அன்று நடைபெற்ற ஒரு சில விழாக்களை மட்டும் மருதப்பாடல்கள் பதிவு செய்துள்ளன.

## இந்திரவிழா

மருதநில மக்கள் மழையை நம்பி வாழ்க்கை நடத்துபவர்கள் மழைவளம் வேண்டி வானோர் தலைவனான இந்திரனுக்குரிய விழாவை நடத்தினர் இச்செய்தியை,

*இந்திர விழவிற் பூவின் அன்ன* (ஐங். 621)

என வரும் ஐங்குறு நூற்றுத் தொடரால் அறியலாம்.

இவ்விழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றதாகச் சிலப்பதிகார, மணிமேகலைக் காப்பியங்கள் தெரிவிக்கின்றன சிலப்பதிகாரத்திலுள்ள இந்திர விழவூரெடுத்த காதையும், மணிமேகலையிலுள்ள விழாவறை காதையும் மருதநிலத்துப்

பேரூர்களில் ஒன்றான காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்ந்த இந்திரவிழா பற்றிக் கூறியுள்ளமை இங்கு நினைவுக் கொள்ளத்தக்கது.

சித்திரைத் திங்களில் நிறைமதி நாளில் இவ்விழா நடைபெற்றுள்ளது. பூம்புகாரில் பொற்குடங்களில் கொணர்ந்த காவிரியின் புண்ணிய நன்னீரால் இந்திரன் நீராட்டப்பட்டதாகச் சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறிகிறோம்.

*தண்ணறுங் காவிரித் தாதுமலிப் பெருந்துறைப்*
*புண்ணிய நன்னீர்ப் பொற்குடத் தேந்தி*
*மண்ணக மருள வானகம் வியப்ப*
*விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி*

(சிலம்பு. இந்திர. வரி. 165–168)

நடத்தப்படும் இவ்விழா, அக்காலத்தில் நடத்தப்பட்ட விழாக்களிலேயே மிகப்பெரும் விழாவாகக் கொள்ளப்படுகிறது.

வயல்சூழ்ந்த மருதநிலத்து ஊர்களில் நிகழும் இந்திர விழாவைக் கண்டுகளிக்க மக்கள் திரண்டு செல்வதையும், இவ்விழாவின் கண் ஆடல்பாடல் நிகழ்த்துவதற்கு பரத்தையர் அனைவரையும் ஒருங்கே கூட்டியதையும் பத்துப்பாட்டு, ஐங்குறுநூறு வாயிலாக அறிகிறோம்.

இத்தகு பெரும்விழா பற்றி அகநானூற்றின் மருதப் பாடல்களில் யாதொரு குறிப்பும் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**புனலாடு விழா**

ஆறுகளில் பெருக்கெடுத்தோடும் புதுப்புனலில் பாய்ந்து நீந்தி விளையாடுவதைப் புனல் விளையாட்டு என்பர். ஆடவர் தம் இளம் மனைவியருடனோ, காதல் பரத்தையருடனோ சேர்ந்து மகிழ்ந்து விளையாடும் விளையாட்டு இது. இதனையே பலர் கூடியிருக்கும் பெருந்துறையின்கண் நிகழ்த்தலும் உண்டு. ஆடவர் தத்தமது மனைவியருடன் சேர்ந்து புனலாடியதை விடவும் பரத்தையருடன் சேர்ந்து புனலாடியதே மிகுதி. மருதப்பாடல்கள் பலவற்றில் தலைவன் பரத்தையருடன் சேர்ந்த புனலாடிய செய்தி காணப்படுகிறது.

தலைவன் பரத்தையொடு வேழக்கரும்பாலாகிய வெள்ளிய தெப்பத்தில் களிறும் பிடியும் போல முகமலர்ச்சியுடன் புனலாடியதும் (அகம். 6), ஒளி பொருந்திய நெற்றியும், மணம்வீசும் மலர் வேய்ந்த கூந்தலும், மாவடு போன்ற கண்களும், முத்துவடம் அசையும் முலையும் நுண்ணிய அழகின் நலனம் வாய்ந்த பரத்தையொடு இடையறாது புனலாடியதும் (அகம். 116), வலிமைமிக்க களிற்றினைப் போல புனை தழுவி நாணம் சிறிதுமின்றி இளமகளிரொடு புனலாடியதும் (அகம். 266), இன்றும் தொடர்ந்து பரத்தையருடன் புனலாடியதும் (அகம். 296), தலைவி தலைவன்பால் ஊடல் கொள்ளப் பெரிதும் காரணமாயிற்று.

இளம் ஆடவரும் மகளிரும் சேர்ந்து புனலாடி மகிழ்வதை அரசனே கண்டு களிப்பதும் உண்டு. ஒருமுறை சோழப் பேரரசன் கரிகால்வளவன் தன் சுற்றத்தாருடன் காவிரி ஆற்றங்கரையில் கழாஅர் முன்றுரையில் அமர்ந்து இவ்விழாவைக் கண்டுக்களிக்க, இசை ஒலிக்கும் அழகிய வீரக்கழல் அணிந்தவனும், இடுப்பில் கச்சினைக் கட்டிப் பொன்னாலாகிய கஞ்சதானம் ஒலிக்கப் புனலின்கண் பெருவிருப்போடு ஆடியவனுமான ஆட்டனத்தியைக் காவிரிவெள்ளம் இழுத்துச் சென்றது.

புனலாடிய ஆட்டனத்தி சுழலில் சிக்கிக் காவிரியாற்றால் அடித்துச் செல்லப்பட்டதையும், அவன் மனைவியாகிய ஆதிமந்தி காவிரிக் கரையிலேயே தொடர்ந்து ஓடித் தன் கணவனை எங்கும் காணாது கடைசியில் மருதி என்பாள் காட்டக் கண்டாள் என்பதையும் பல பாடல்களால் அறிகிறோம் (அகம். 76, 236, 376, 399).

## விளக்கீட்டு விழா

வீடுகளிலும், வீதிகளிலும் விளக்கேற்றி மாலைகளைக் கட்டிக் கொண்டாடிய விளக்கேற்று விழாவும் அந்நாளில் கொண்டாடப்பட்டது (அகம். 86, 266). மழை நீங்கிய பருவத்தில் சந்திரன் அறுமீனாகிய கார்த்திகையோடு சேரும் நாளில் இவ்விழா நிகழ்ந்தது. இருள் செறிந்த நடுநாளில் இவ்விழா நிகழ்ந்ததாகக் கூறப்படுதலின் இது இக்காலத்தில் கொண்டாடப்படும் தீபாவளியையொத்த விழாவாகலாம் என்பர் பேரா. மு. சண்முகம்பிள்ளை. எனினும் இன்று கொண்டாடப்படும் கார்த்திகை தீபத்தை யொத்ததாகக் கொள்வதே பொருத்தமெனப்படுகிறது.

இவ்விழா ஊரிலுள்ள பலரும் சேர்ந்து கொண்டாடுவதாகவும், இவ்விழாவிற்கு பிரிந்த தலைவன் வரவேண்டும் என்றும் தலைவி கூறுவதினால் இவ்விழாவில் ஆடவரும் உடனிருந்து கொண்டாடுதல் வழக்கமாயிருந்தது என்பதும் தெளிவாகிறது.

## சிறுதெய்வ வழிபாடு

நாட்டார் வழக்காற்றில் சிறுதெய்வ வழிபாடே சிறப்பிடம் பெறும் மக்கள் தாங்கள் வாழும் ஊர்களிலுள்ள சதுக்கங்களிலும் சந்துகளிலும் எல்லோரும் கூடும் மன்றங்களிலும் தாம் வாழும் இல்லங்களிலும் சிறுதெய்வங்களை வணங்கி வந்தனர். சதுக்கம் என்பது நான்கு தெருக்கள் கூடுமிடம்; சந்து என்பது முச்சந்தி, ஐஞ்சந்தியைக் குறிக்கும். ஊருக்கு நடுவில் எல்லோரும் வந்து கூடுவதற்கு பயன்படும் மரத்தடியே மன்று எனப்படும். இந்த மன்றம் அந்தந்த ஊர்களில் ஊருக்கு நடுவாய் செழித்து வளர்ந்திருக்கும். நாட்டுப்புறங்களில் வாழும் உழைக்கும் மக்களின் வழிபடு தெய்வம் காளி, கருப்பன், முனியன், மாடன் போன்ற சிறு தெய்வங்களே. ஆரியமயமாக்கப்பட்ட மேட்டுக் குடியினரின் பெருந் தெய்வ வழிப்பாட்டு முறைக்கும், இச்சிறு தெய்வ வழிபாட்டு முறைக்கும் பண்பாட்டளவில் பெரிய வேறுபாடு உண்டு. இங்கு உயிர்ப்பலி தவறாது இடம்பெறும். உழைக்கும் மக்கள் பயன்படுத்தும் கள்ளோ, சுருட்டோ படையலில் இடம்பெறும்.

தன் மகளுக்கு உற்றநோயைத் தணிக்கும் பொருட்டு துறையின்கண் நிலைபெற்ற தெய்வத்திற்குக் கையுறைப் பொருளாகக் கள்ளையும், மாலையையும் படைக்கிறாள் ஒரு தாய். அது மட்டு மில்லாமல் நிமிர்ந்த கொம்பினையும், தொங்கும் காதினையுமுடைய வெள்ளாட்டுக் கிடாயையும் செலுத்துகிறாள். அப்படியும் தன் மகளுக்கு உள்ளநோய் தணியும் உபாயம் அறியாமல் இருக்கிறாள் என்பதைக் காண்கிறோம்.

> *கள்ளும் கண்ணியும் கையுறை யாக*
> *நிலைக்கோட்டு வெள்ளை நாள் செவிக் கிடாஅய்*
> *நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஒச்சித்*
> *தணிமருங்கு அறியான் யாய்அழ*
> *மணிமருள்மேனி பொன்னிறம் கொளலே* (அகம். 156)

உயிர்ப்பலி பெறுவதும், அச்சம் தரும் தோற்றமுடையதுமான சிறுதெய்வம் குறித்து,

*உயிர்ப்பலி பொறூஉம் உருகெழு தெய்வம்* (அகம். 166)

என்றனர்.

**கூத்துகள்**

பெண்களால் மேற்கொள்ளப்படும் குரவைக்கூத்து, துணங்கைக் கூத்து பற்றி அகப்பாடல் ஒன்று கூறுகிறது.

பெண்கள் எழுவரோ, எண்மரோ, ஒன்பதின்மரோ கைக்கோத்துக் கொண்டு வட்டமாக நின்று ஆடும் கூத்தையே குரவைக்கூத்து என்பர். இதில் பெண்கள் தங்கள் பாடல் வாயிலாக ஏதேனும் ஒரு செய்தியைச் சொல்லுவர்.

பெண்கள் நுண்ணிய வேலைப்பாடமைந்த அழகிய குடத்தினை நடுவில் வைத்து, தம் கணவரது நற்பண்பில்லாத பரத்தமை ஒழுக்கத்தைப் பாடி விரிந்த பூங்கொத்துக்களையுடைய காஞ்சி மரத்தின் நிழலில் குரவை ஆடியதாக அறிகிறோம். பெண்கள் வட்டமாய் நின்று வெறும் மணலை உலக்கையால் குற்றிக் குரவையாடுதல் உண்டு (அகம். 286). இதனை

*தீக்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்*
*பூங்காஞ்சி நீழல் அலைப்பார் புகார் மகளிர்*
*ஆழிக் கொடித்திண்சேர்ச் செம்பியன் வம்பலர்தார்ப்*
*பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல்*
*பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்*

(சிலம்பு. வாழ்த்து 26)

என்ற வள்ளைப்பாட்டோடு ஒப்புநோக்கலாம்.

சிலப்பதிகாரத்தில் "ஆய்ச்சியர் குரவை", "குன்றக்குரவை" என இரு காதைகள் இடம்பெற்றுள்ளன. முன்னது ஆயர்பாடிப் பெண்கள் மாயோனை வாழ்த்திப் பாடியது. பின்னது குன்றிலே வாழும் முருகனை வழிபட்டு வேட்டுவப் பெண்கள் பாடியது.

தொடக்கத்தில் சமூக நெறிபிறழ் நிகழ்வுகளை எள்ளல் தன்மையுடன் பாடி ஆடுவதற்கான வடிவமாகிய இக்கூத்து, பின்னர்

தெய்வங்களை வணங்கிப்பாடி ஆடுவதற்கான வடிவமாகியிருக்கலாம் என்று கருதலாம்.

விழாக்காலத்தே முழவு ஒலிக்கு ஏற்றாற்போல தாள லயத்தோடு ஆடும் ஆட்டத்திற்கு துணங்கைக் கூத்து என்று பெயர்.

**சடங்குகளும் நம்பிக்கைகளும்**

ஆதித் தமிழர்களின் பண்பாட்டில் தெய்வம் பற்றிய நம்பிக்கைகள் இருந்தன. இன்றைய பகுத்தறிவின் பார்வையில் மூடநம்பிக்கைகள் எனக் கூறத்தக்க நம்பிக்கைகள் அம்மக்களிடம் வேரூன்றியிருந்தன. எனவே சடங்குகளை வெறும் அறியாமை எனக் கொள்ள இயலாது. அது மனோதத்துவ முறையில் செய்யப்போகும் செயலுக்கு வழிகாட்டியாயிருக்கிறது.

**மழைச் சடங்கு**

மருதநில மக்கள் மழைக்காகச் செய்யும் சடங்கை பரிபாடல் கூறுகிறது (பரி. 10. 85–86) சங்கு, நண்டு, இறவு, வாளை போன்றவற்றைக் கையால் பிடித்து நீரில் இட்டனர். "விளைக", "பொலிக" எனக் கட்டளையிட்டனர். இவ்வாறு சங்கை நதியிலிடுதல் தொத்து மந்திரமாக (Contagious Magic) மழைவேண்டி செய்யப்பட்டது. தொடர்பு கொண்டிருந்த இரு பொருட்களிடையே நிரந்தரத் தொடர்பு இருக்கும் என்பது தொத்து மந்திரமாகும். நீரொடு நெடுநாள் தொடர்பு கொண்டிருந்த சங்கு, சிப்பி போன்ற பொருட்களுக்கு நீரை வரவழைக்கும் இயல்பு உண்டு என்ற நம்பிக்கையை இங்குக் காணலாம். இவற்றை ஆற்றில் விட்டால் நீர் பெருகும். ஆற்றில் நீரைப் பெருக்க மழைபெய்யும் என்று நம்பினர்.

**விதைப்புச் சடங்கு**

விதைப்புக்குமுன் மந்திர உச்சாடனம் செய்தனர். திருமுருகாற்றுப்படை விவரிக்கும் வேலன் வெறியாடல் விதைப்புக்கு முந்திய சடங்காகவே தோன்றுகிறது. பலியிடப்பட்ட மறியின் குருதியில் விதையைத் தோய்த்து விதைக்கின்றனர். இரத்தம் உயிர் சக்தியின் அறிகுறி. இரத்தத்தில் விதை நனைக்கப்பட்டால் வளரும் என்பது அக்கால நம்பிக்கையாகும்.

**மணச்சடங்கு**

பெண்ணையும் ஆணையும் இணைத்து ஒன்றாக இல்லறத்தில் ஈடுபட வைக்கும் திருமண நிகழ்வு சமுதாயத்தில் பலரறிய செய்யப்பட வேண்டியது எனக் கருதப்பட்டது.

*நேரிடை முன்கை பற்றி நுமர்தர*
*நாடறிய நன்மணம் அயர்கம்* (குறிஞ்சி. 231–32)

எனவரும் தொடரால் இதனை அறியலாம். வரலாற்றை நோக்கின், சங்ககாலச் சமுதாயம் சமயஞ்சார்ந்த சமுதாயமாக இருந்ததாகத் தெரியவில்லை. பெரிதும் போர்க்காலச் சமுதாயமாகவே இருந்தது. அத்துடன் அன்றாட நிகழ்வுகளுக்கும், உலகியல் இன்பங்களுக்கும், உலகியல் தேவைகளுக்கும் மதிப்புக் கொடுத்து அவற்றை ஒட்டியே அவர்கள் வாழ்க்கை முறைகளும் அமைந்திருந்தமையால் அவர்கள் திருமணச் சடங்கு முறைகளும் உலகியலை ஒட்டியனவாகவே அமைந்திருந்தன.

சங்கப் பாடல்களில் திருமண சடங்குமுறைகள் பற்றித் தனிப்பாடல்கள் காணப்படவில்லையெனினும், அகநானூற்றில் இடம்பெற்றுள்ள 86ஆம் பாடலும், 136ஆம் பாடலும் தமிழக மக்களிடையே நிலவிய மணச் சடங்குகள் பற்றி ஓரளவு அறியத் தருகின்றன. இந்த இரு அகநானூற்றப் பாடல்களும் திருமண சடங்குமுறைகளை எடுத்துக்காட்டுவதற்காக எழுதப்படவில்லை. 86ஆம் பாடலில் பரத்தையிடம் சென்று வந்த தலைவன் மீண்டும் தலைவியிடம் வரும்போது தோழி வாயில் மறுக்கிறாள். இந்த நேரத்தில் தலைவன் தன் திருமண நாளில் தன் மனைவி எவ்வாறு இருந்தாள்; இன்று தன்னைப் பார்க்கவும் விரும்பவில்லையே எனக் கூறும் பகுதியில் திருமண நாளன்று நடந்தவற்றை அவன் வரிசையாகக் கூறுகின்றான்.

அதேபோல் ஊடியுள்ள தலைவி எவ்வாறு திருமண நாளன்று இருந்தாள் என்பதைத் தலைவன் கூறுவதாக 136ஆம் பாடல் அமைகிறது. இவ்விரு பாடல்களிலும் ஓரளவு தமிழகத்தின் திருமண சடங்குகள் பற்றி அறிய முடிகிறது.

ஊரறிய ஒரு பெண் ஆடவனை மணக்கிறாள் என்பதனை நாள் முரசம் கொட்டி அறிவிப்பது திருமணத்தில் இன்றியமையாததாக

இருந்தது. மணமுழவு, மணமுரசு இரண்டும் ஒலிக்கப் பெறும் திருமணத்தில் பங்கேற்பவர்கள் அமர்வதற்காகப் பந்தல்கள் அமைக்கப் பெற்று அங்குப் புதுமணல் பரப்பப்படும். அங்கு வந்த மக்களுக்கு ஊன் கலந்த சோறும், சில வேளைகளில் உளுந்து கலந்து செய்யப்படும் களி மிதவையும் மகிழ்ச்சியுடன் அளிக்கப்படும். பெரியோர்களையும் கடவுளையும் வணங்கி உகந்த நேரமான திங்களை உரோகிணி கூடும் நேரத்தில், புள் நிமித்தங்கள் நன் நிமித்தங்களாக அமையும் காலத்தில் திருமணத்தை நடத்துவர். அப்போது மங்கலமாக விளக்கேற்றி வைப்பர். புதிய ஆடை அணிந்த மணப்பெண்ணைப் பந்தரில் அமர்த்தி அறுகம்புல்லின் கருமையான கிழங்கிலுள்ள முகையை வெண்மையான நூலில் கட்டிப் பெண்ணிற்கு அணிவிப்பர். இவ்வாறு அணிவிப்பது பெண்ணின் திருமணம் நிலைபேறானதாக இருக்கவேண்டும் என்பது கருதியாகலாம். இன்றும் திருமணமான இணையரை,

*ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி*
*மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருக்க*

என வாழ்த்துவது இங்கு குறிப்பிடத்தக்கது.

திருமண நிகழ்ச்சியில் நடைபெறும் ஒவ்வொரு செயலையும் எடுத்துக்காட்டித் திருமண விழாவைக் கண்முன் நிறுத்துகிறார், நல்லாவூர்க்கிழார் என்னும் புலவர். இவர் செல்வச்செழிப்புள்ள ஒரு திருமணத்தைப் பதிவு செய்கிறார். பந்தலில் வெண்மணல் பரப்பப்பட்டுள்ளது. வந்த விருந்தினர்க்கு உணவு படைக்கப்படுகிறது. திருமணப் பெண்ணை உரோகிணித் திங்களைக் கூடிய நாளில் நீராட்டுகின்றனர். மங்கல மகளிர் முன்னும் பின்னுமாகக் கலங்களில்வ நீர் கொடுக்கின்றனர். அந்நீரைப் புதல்வனைப் பெற்ற நான்கு மகளிர் வாங்கி மணப்பெண்ணைச் சூழ்ந்து நின்று நீராட்டுகின்றனர். நீரில் நெல்லும் அலரியும் போடப்பட்டுள்ளன. இவ்வாறு நீராட்டும்போது அவர்கள் நால்வரும்

*கற்பினின் வாழா அ நற்பல உதவிப்*
*பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென* (அகம். 86)

பெண்ணை வாழ்த்துகின்றனர். திருமணமான பின்னர் ஒரு பெண்ணிடம் சமூகம் எதிர்பார்ப்பதை இவர்கள் வாழ்த்து வாயிலாக வெளிப்படுத்துகின்றனர்.

கற்பினின்று வழுவாது, கணவனுக்கு பல நல்ல உதவிகளைச் செய்து அவன் உன்னை விரும்பிப் பேணும் விருப்பத்தை அவன் மனத்தில் ஏற்படுத்தக் கூடியவளாக இருக்க வேண்டும் எனப் பாராட்டுவதில் கற்பு என்ற பண்பு திருமணத்தில் இன்றியமையாத தன்மை பெறுவதைக் காண முடிகிறது.

திருமணத்தின்போது மணப்பெண்ணைக் குளிப்பாட்டுதலைப் பழங்குடி மக்களான கோண்டுகளிடம் காணலாம். நீர் செழிப்புத் தன்மை தரக்கூடியது. இனவிருத்திக்கு உதவுவது என்பது உலகமெங்குமுள்ள பழங்குடிகளிடம் நிலவி வந்த நம்பிக்கையாகும்.

நீரும் நெல்லும் சேர்ந்து முளைவிடுதல் போல் மணமகளும் பிள்ளைப்பேறு அடைவாள் என ஒத்த மந்திரமாக நெல்லும், பூவும் தூவப்பட்டன. இது மனித இனவிருத்தியும், பயிர்ச் செழிப்பும் அக்காலத்தில் தொடர்புபடுத்தப்பட்டிருந்ததற்குச் சான்றாகும். ஏற்படவேண்டிய விளைவும், செய்யப்படுகின்ற செயலும் ஒத்திருக்குமானால் ஒத்தமந்திரம் (Imitative Magic) என்பர்.

பிள்ளைப்பேறுடையவர்கள் வாழ்த்தினால் பிள்ளைப் பேறு உண்டாகும் என்பதைத் தொத்து மந்திரமாகக் கொள்ளலாம். இவை முற்றிலும் மந்திரச் சடங்குகளாகவே இருக்கின்றன. புதிய உண்கலம் பெறுதல் மணமகளுக்குரிய சடங்காகும்.

மணப்பந்தலில் வாகை இலைமீது, முதலில் மழை பெய்தபோது தோன்றி வளர்ந்த அறுகம்புல்லைக் கிழங்கோடு பிடுங்கி, வெண்ணூலால் சுற்றி வைக்கப்பட்டிருந்த செய்தியை மற்றொரு பாடல் (அகம். 136) குறிக்கிறது. இதனாலும் மனித இனவிருத்தியும், வேளாண் செழிப்பும் தொடர்புபடுத்தப்பட்டிருந்ததை அறியலாம். இது மந்திரச் சடங்காகும் என்பார் அறிஞர் கா. சுப்பிரமணியன்.

இத்தகு முறையில் திருமணம் எளிமையாகவும் சமயச் சடங்குகளின்றியும் நடத்தப்பட்டன. திருமணத்தின்போது புத்தாடை உடுத்துவதும் புது அணிகலன்களை அணிவதும் மலர்மாலை சூடுவதும் உண்டெனத் தெரிகிறது. மணமகன் மணமகளுக்கு தாலி கட்டும் வழக்கம் இருந்ததாகப் பதிவுகள் இல்லை. அதற்கு மாறாக 'வாலிழை மகளிர் நால்வர்கூடி' மணமகளுக்கு நறுமணம் மிக்க மலர்களையும் வெண்ணூலையும் சூட்டினர் என குறிப்பிடப் பட்டுள்ளமை கருதத்தக்கது.

**ஈமச்சடங்கு**

பெற்றோர் இறந்தபின் அவர்தம் "ஆத்மா" அமைதி பெறப் பிள்ளைகள் செய்யும் சடங்கே ஈமச்சடங்கு எனப்படுகிறது. "ஆண் குழந்தை பெற்றவர்கள் இவ்வுலகில் புகழ்பெற்று மறுஉலகம் போவார்கள். ஏனெனில் ஆண் குழந்தைக்குத்தான் பெற்றோர்க்கு ஈமக்கடன் செய்து பிதிர்கடன் நிறைவேற்றும் தகுதி உண்டு" என ஒரு பாடல் கூறுகிறது.

*இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமை உலகமும் மறுஇன்று எய்துப*
*செறுநரும் விழையும் செயிர்நீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்மலோர்* (அகம். 66)

என்கிறது அப்பாடல். இன்றும்கூட ஈமச்சடங்கு செய்யும் உரிமை மகனுக்கே உள்ளதால் புதல்வனைப் பெற்றவர்களே இம்மை மறுமை என இரு உலகத்திலும் சிறப்படைவர் என்ற நம்பிக்கை வலியுறுத்தப்படுகிறது.

பண்டைக்காலத்தில் நடைபெற்ற விழாக்களும், சடங்குகளும் இன்று காணப்படுதல் போன்றே மக்களின் நம்பிக்கையினடிப்படையில் நிகழ்த்தப்பட்டன என்பதையும், சங்க இலக்கியப் பாடல்கள் வேறு எங்கிலும் காணப்படாது அகநானூற்றில் மட்டுமே இடம்பெறும் பண்டைத் திருமணச் சடங்கு இன்றுபோல் ஆரியமயமாக்கப்பட்ட சமயச் சடங்காக இல்லாமல் உலகியலை ஒட்டிய சடங்காக இருந்தது என்பதையும் ஒருவர் இறந்தபின் மேலுலகம் போவார், அவருக்காக அவரின் புதல்வர்கள் ஈமச்சடங்கு செய்ய வேண்டும் என்ற நம்பிக்கை பண்டைக்காலம் தொட்டே தமிழ்ச் சமுதாயத்தில் நிலவிவந்தது என்பதையும் இதன் மூலம் அறிகிறோம்.

# குடும்பமும் உடைமையும்

பாலுணர்வும், அதனால் ஏற்படுகின்ற ஆண் பெண் உறவும் அனைத்து உயிர்களுக்கும் பொதுவானவை. மனிதன் மட்டுமே அவற்றை நெறிப்படுத்தி வாழக் கற்றுக் கொண்டான். மனிதன் தன்னுடைய பாலுணர்வுத் தேவைகளை நிறைவு செய்து கொள் வதற்கும், தன்னுடைய வழித்தோன்றல், உடைமை போன்றவற்றை வளர்த்துக் கொள்வதற்கும், பிறருக்கு எடுத்துக்காட்டாக இருந்து அறநெறிகளைச் சுற்றத்தாருடன் பகிர்ந்து கொள்வதற்கும் ஏற்படுத்திக் கொண்ட ஒரு நிறுவனமே குடும்பம் எனப்படும். பலர் முன்னிலையில் ஆணும் பெண்ணும் இணைந்து வாழத் தலைப்படும் திருமணமே குடும்பத்தின் தோற்றத்திற்குக் காரணம் எனலாம்.

## குடும்பம் ஒரு விளக்கம்

திருமணத்தின் மூலம் பிணைக்கப்பட்டு ஒரு குடியிருப்பில் கணவன், மனைவி, தாய், தந்தை, மகன், மகள், தம்பி, தங்கை போன்ற உறவுமுறைகளுடன் பொதுப்பண்பைப் படைத்துப் பாதுகாத்து வளர்ச்சியுறுவதே குடும்பம் எனப் பிரித்தானியக் கலைக்களஞ்சியம் குடும்பம் பற்றி விளக்குகிறது.

குடும்பம் எல்லாச் சமூகங்களிலுமுள்ள அடிப்படையான அமைப்பு. குடும்பத்தினின்று உறவு ஏற்படுகிறது. சமூகத்தின் பல்வேறு பிரிவுகளுக்கும் குடும்பம் அடிப்படையானது.

“இரத்த உறவுமுறைகளும் பிற உறவுமுறைகளும்” என்ற நூலை எழுதிய மார்கன் என்ற மானிடவியலறிஞர் குடும்பம் பற்றி விளக்கும்போது “குடும்பம்” என்பது இயக்கமுள்ள சித்தாந்தத்தையே குறிக்கிறது. அது என்றைக்கும் இயங்காதிருப்பதில்லை. சமுதாயம் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்கு முன்னேற முன்னேற அதுவும் கீழான வடிவத்திலிருந்து மேலான வடிவத்திற்கு முன்னேறிச் செல்கிறது” என்கிறார்.

திருமண அடிப்படையில் உருவாகும் ஓர் உயிரினக் குழுவே குடும்பம் ஆகும். இக்குடும்பம் மக்கட் பேற்றின்மூலம் விரிவடைகிறது.

உறவு முறையால் தொடர்பைத் தெளிவுபடுத்துகிறது. பண்பாட்டு அமைப்பைக் காத்து வருகிறது. உறுப்பினர்களின் தேவைகளை நிறைவு செய்து கொள்வதற்குரிய வழி வகைகளை வகுக்கிறது.

மணமான கணவன், மனைவி இருவரும் தம் மக்களுடன் சேர்ந்து வாழ்வதே குடும்பம் எனப் பொதுவாகக் கொள்ளப்பெறுகிறது. தமிழிலக்கியத்தில் "குடும்பம்" என்ற சொல்லை முதன்முதலாகக் கையாள்கிறவர் திருவள்ளுவரே. சங்க இலக்கியத்திலோ, தொல்காப்பியத்திலோ குடும்பம் என்ற சொல் இடம்பெறவில்லை. மனை, இல், இல்லம், குடி ஆகிய சொற்கள் குடும்பம் என்ற பொருள் தருவதாகக் கொள்ள முடிகிறது. குடும்ப இயலையே கற்பியல் என்றார் தொல்காப்பியர் எனக் கருதலாம்.

## குடும்பத்தின் தோற்றம்

மனித இன வளர்ச்சியை மூன்று படி நிலைகளாக வகுத்த எங்கெல்ஸ், காட்டுமிராண்டி நிலையில் குழு மணமும், அநாகரிக நிலையில் இணை மணமும், நாகரிக நிலையில் ஒருதார மணமும் இடம்பெற்றிருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

இனக்குழு வாழ்க்கையின் படிநிலை வளர்ச்சியின் இறுதி நிலையே ஒருதார மணமாகும். இவ்வொருதார மணமே குடும்பத் தோற்றத்தின் அடிப்படையாய் அமைந்தது எனலாம்.

## தாய்வழிச் சமூகத்தில் குடும்பம்

தொடக்கக் காலத்தில் உலகம் முழுவதுமே தாய்வழிச் சமூக அமைப்பே நிலவி வந்ததாகச் சமூகவியல் அறிஞர்களும், வரலாற்றாய் வாளர்களும் அறுதியிட்டுரைத்துள்ளனர். அந்நிலையில் பாலியல் உறவில் எவ்வித ஒழுங்கும், கட்டுப்பாடும் அம்மக்களிடம் இருந்ததில்லை. திருமணம், குடும்பம் என்ற அமைப்பும் இல்லை. எனவே ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே வெறும் பாலினத் தொடர்பு மட்டுமே இருந்தது. பாலினத் தொடர்பு முடிந்தவுடன் இருவரும் எந்தவிதப் பந்தமுமின்றிப் பிரிந்தார்கள். பிறந்த குழந்தை தாயிடமே நெடுங்காலம் வளர்ந்தது. தந்தை யார் என்று அறியாத நிலையில், தாய் யாரென்று அறிந்த நிலையில் குழந்தை தாயிடமே பேரளவு வாழ்ந்தது.

இத்தகு நாடோடி வாழ்வில் மக்கள் கூட்டம் கூட்டமாக வாழத்

தலைப்பட்ட நிலையில் பெண்ணே அக்கூட்டத்திற்குத் தலைவியாக இருந்தாள். இவள் அக்கூட்டத்தில் உள்ள எல்லா ஆண்களுடனும் புணர்ச்சி வைத்துக்கொண்ட நிலையை அறிய முடிகிறது. வரலாற்றறிஞர் ராகுல சாங்கிரித்தியாயன் "வால்காவிலிருந்து கங்கை வரை" என்ற தமது நூலில் இவற்றைப் பதிவு செய்துள்ளமையைக் காணலாம்.

வரலாற்றுக்கு முற்பட்ட தமிழர்களும் இத்தகு தாய்வழிக் குடும்பமுறையிலேயே வாழ்ந்தனர் என்பது மானுடவியலறிஞர் பலர்தம் கருத்தாக உள்ளது.

பழந்தமிழரிடம் தாய்வழிச் சமூக முறை இருந்தமைக்கான சான்றுகள் சங்க இலக்கியக் குறிப்பில் வெளிப்படையாகப் புதிவாக வில்லையென்றாலும், இலைமறைகாயாகச் சில சான்றுகள் இடம் பெற்றுள்ளன. தமிழ் மக்களின் அகவாழ்வைப் படம்பிடித்துக் காட்டும் அகப்பொருள் இலக்கணமும், இலக்கியங்களும் கூற்றுக்குரியவர் களாகத் தாய், செவிலி, தோழி, பாங்கன் முதலானோரைப் பட்டியலிடுகின்றன. தந்தைக்கும், தனையனுக்கும் கூற்றுகள் இல்லை. மகளின் களவுச் செயல்கள் பற்றி வருந்தும் பொறுப்பும் உடன்போக்கில் பிரிந்த மகளை மருமகன் வீட்டில் சென்று காணும் பொறுப்பும் தாய் அல்லது செவிலித் தாய்க்கே இருந்தன. எனவே ஒரு காலத்தில் பெற்ற பிள்ளைகளின் நடத்தை, திருமணம் முதலியன பற்றிக் கவனிக்கும் முதல் பொறுப்பும், முழுப் பொறுப்பும் தாய்க்கே இருந்தது என்பதை மேற்கண்ட குறிப்புகள் உணர்த்துகின்றன. தாய்வழித் தலைமையின் எச்சம் என்று இதனைக் கருதலாம் என்பர் அறிஞர். இங்கு அம்மன் வழிபாடே ஏனைய வழிபாடுகளை விடச் சிறந்து விளங்குவதற்குக் காரணம், ஒரு காலத்தில் பெண் பெற்றிருந்த தலைமைப் பண்புதான் என்பதையும் அறிகிறோம்.

### தந்தைவழிச் சமூகத்தில் குடும்பம்

வேட்டையாடித் திரிந்த மனித இனம் மெல்ல மெல்ல ஆடுமாடுகளை வளர்க்கப் பழகியது. முதல் நாகரிக அடையாளங்கள் தோன்றத் தொடங்கின. ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் மாடு செல்வமாக குழுவின் பொதுச் சொத்தாக விளங்கியது. பின்னர் தனியொரு ஆண் மகனின் தனிச்சொத்தாக மாறியது. சமுதாயத்தில் வேலைப் பாகுபாடுகள் ஏற்பட்டபோது முன்னர் குடும்பத்தின் தலைவியாக இருந்த நிலையைப் பெண் இழந்தாள்.

தொல்காப்பியர் காட்டும் குடும்பம் தந்தை வழி சார்ந்தது. ஆண்மகனே குடும்பத் தலைவனாக இருந்து ஆட்சி புரிகிறான்.

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (தொல். 1041) எனக் குறிப்பதற்கேற்ப ஆண் தலைமைச் சிறப்பு பெற்றிருந்தான். மாறாகப் பெண்ணோ அச்சமும், நாணமும் நிரம்பியவளாகக் குறிக்கப் பெறுகிறாள்.

*அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்*
*நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப* (தொல். 1042)

பெண் குழந்தை பிறப்பது மகிழ்ச்சியற்ற நிகழ்ச்சியாகக் கூறப்படாவிடினும் மருதத் திணைப் பாடல்களில் ஆண்குழந்தையின் பிறப்பு சிறப்புக்குரிய நிகழ்ச்சியாகவே பேசப்படுகின்றது. தம்முடைய குழு, இன நிலைப்பேற்றிற்குப் போர் இன்றியமையாததால் பெண்ணின் பிறப்பு ஆணினது பிறப்பினைப் போல மகிழ்ச்சி கொடுப்பதாக இருக்கவில்லை. தாயை விளிக்கும்போதுகூட "புதல்வன் தாயே" எனக் கூறுவதில் பெருமை கண்டனர் புலவர்.

மனிதகுலம் காட்டுமிராண்டி நிலையிலிருந்து நாகரிக நிலைக்கு மாறும்போது கால்நடை வளர்ப்பு நிலச்சாகுபடி பற்றிய அறிவினைப் பெற்றுவிட்டது. அதன்பிறகு ஆணே கால்நடைகளுக்கும், உழைப்புக் கருவிகளுக்கும் உரிமையுடையவனாக ஆகிவிட்டான். இவ்வாறு ஆணின் உரிமை பெருகும்போது தந்தைத் தலைமைக் குடும்பங்கள் அமைகின்றன. பலவகைகளிலும் தந்தைத் தலைமை உயர்ந்திருந்த நிலையைத்தான் சங்க இலக்கியம் தெளிவுபடுத்துகின்றது.

## மருதநில வாழ்வும் குடும்ப உருவாக்கமும்

விலங்குகளுடன் போராடி வாழ்ந்த குறிஞ்சிநில வாழ்க்கை, ஆடு மாடுகளை வளர்த்துப் பயன்படுத்திய முல்லை நில வாழ்க்கை இவற்றை விடவும் வளம்மிக்க நிலத்தை உழுது வாழும் மருதநில வாழ்க்கையே குடும்ப உருவாக்கத்திற்குப் பொருத்தமாக அமைந்தது.

வேட்டைத் தொழிலும், கால்நடை வளர்ப்பும் பூகோள வளங்களுக்கு நேரடியாகக் கட்டுப்பட்டனவாகும். இதில் மனித முயற்சி என்பது இவ்வளங்களைப் பயன்படுத்துவது மட்டுமே. எனவே இத்தொழில்களைக் கொண்ட சமூக வாழ்வு "இடம் பெயரலுக்கு"

உட்பட்டதாகும். ஆனால் மனித மூளை – கருவி உற்பத்தி மண்வளம் ஆகியவற்றோடு இணைந்த உணவு உற்பத்தியிலான மருத நில வாழ்க்கை ஒப்பீட்டளவில் இடம்பெயரலுக்கு அவ்வளவாக இடம்தராதது ஆகும். எனவே இங்கே குடும்பம் என்பது ஒரு நிலையான நிறுவன அமைப்பாக உருவாவதற்கு அனைத்து வாய்ப்புகளும் இருக்கின்றன.

மருதநிலத்தில் குடும்பம் குடும்பமாக வாழ்ந்த மக்களைக் "குடும்பமார்" எனவும், அக்குடும்பத்தின் தலைவனைக் 'குடும்பன்', 'குடியானவன்' எனவும் அழைத்து வரலாயினர். இன்றும் தமிழகத்தின் தென்மாவட்டங்களிலும் வடமேற்கு மாவட்டங்களிலும் வாழும் மருதநிலத்தவர் 'குடும்பமார்' என அவர்தம் குலப்பெயருடன் அழைக்கப்பட்டு வருவதைக் காணலாம்.

ஆணும் பெண்ணும் இணைந்து குடும்ப வாழ்வில் ஈடுபடுவதற்குரிய நிலையினைச் சமூகத்திற்கு அறிவிப்பதே திருமணம் ஆகும். உடலாலும் உள்ளத்தாலும் இணைந்து குடும்பத்தை உருவாக்கும் பணியைத் திருமணம் ஆக்குகின்றது. பண்டைத் தமிழகத்தில் திருமணம் எவ்வாறு நடத்தப்பட்டது என்பதை அறிய ஏனைய திணைப்பாடல்களில் சான்றெதுவும் இல்லாத நிலையில் மருதத்திணைப்பாடல்களில் மட்டும் முழுமையான சான்றாதாரங்கள் கிடைத்திருப்பது எண்ணிப் பார்க்கத்தக்கது. திருமணத்தையொட்டி,

1. உளுந்தம் பருப்புடன், நெய் கலந்து சமைத்த பொங்கலையும், தேர்ந்தெடுத்த இறைச்சியுடன் கூடிய வெண்சோற்றையும் படைத்து சுற்றத்தாரையும் உறவினரையும் உண்பித்தனர்.

2. வரிசையாகக் கால்களை (கழிகளை) நட்டு குளிர்ந்த பந்தல் அமைத்து அதன் உள்ளே புதுமணல் பரப்பினர்.

3. மனையின்கண் விளக்கினை ஏற்றி வைத்து மாலைகளைத் தொங்கவிட்டனர்.

4. மனையை அழகுபடுத்தி இல்லுறை தெய்வத்தை வணங்கினர்.

5. வாகைப்பூவையும் அருகம்புல்லையும் வெண்ணூலில் கட்டி வைத்தனர்.

6. மணமுழவும் முரசும் முழங்கின.
7. அனைவரும் புத்தாடை அணிந்து மகிழ்ந்தனர்.
8. முதுபெரும் பெண்டிரும் மக்களை பெற்ற நால்வரும் முன்னின்று முறையே வாழ்த்துடன் மணச்சடங்குகளைச் செய்தனர்.
9. நீரொடு கூட்டிப் பெய்த குளிர்ந்த இதழ்களையுடைய பூக்களையும், நெல்லையும் சொரிந்து 'பெற்றோன் விரும்பும் பிணையை ஆகுக' என வாழ்த்தினர் என்பவற்றை அறிகிறோம்.

உரோகிணியைச் சந்திரன் கூடிய நாளைத் திருமணத்திற் குரிய நாளாகத் தேர்ந்தெடுத்தனர். கோவலன் கண்ணகி திருமணமும் இதே நாளில்தான் நடைபெற்றது. எனினும் அங்கு காட்டப்படும் மாமுது பார்ப்பானும், தீ வலம் வருதலும் மருதப்பாடல்களில் காணப் படவில்லை. சங்க காலத்திற்குப் பிற்பகுதியில், ஆரியமயமாக்கலில் தமிழர் தம் திருமணச் சடங்கில் இம்முறை புகுந்தது என எண்ண இடம் தருகிறது.

திருமணம் பெண்ணிற்குப் புதிய மதிப்புகளையும் புதிய நிலைகளையும் அளிக்கிறது. அதே நேரத்தில் அவளிடமிருந்து சமுதாயம் புதிய கடமைகளையும் எதிர்பார்க்கிறது. அத்துடன் அவளுக்கான சில குணநலன்களையும் அக்குணங்கள் இல்லாத நிலையில் அவளைச் சமுதாய இழிவுப்படுத்துவதையும் சமுதாய வரலாற்று வழி நாம் காணமுடிகிறது. திருமணமான பெண் 'இல்லாள்' என்ற பெயரால் அழைக்கப்பட்டாள். இல்லத்திற்குரியவள் என்ற பண்பைக் குறிக்கும் இச்சொல்லிற்கு நேரடியான ஆண்பாற் சொல்லே தமிழில் இல்லாத நிலையிலிருந்து இல்லத்திற்குப் பொறுப்பானவள் பெண்ணே என்பது புலனாகின்றது. பெண் இல்லத்திற்குப் பொறுப்பாக அமைய, ஆண் தொழில் செய்து பொருளீட்டும் பொறுப்பை மேற்கொண்டான். இதையே

*வினையே ஆடவர்க் குயிரே* (குறுந். 135. 1)

எனக் குறுந்தொகை அடி விளக்கி நிற்கிறது.

**ஆணுக்கேயான புணர்ச்சி சுதந்திரம்**

அகப்பாடல்களில் காட்டப்படும் திருமணத்தால் புணர்ச்சிச் சுதந்திரம் பெண்களிடமிருந்து பறிக்கப்படுகின்றதே தவிர ஆண்களிட மிருந்து பறிக்கப்படுவதில்லை. திருமணச் சடங்கின்போது கூட,

*கற்பினின் வழாஅ நற்பல உதவி*
*பெற்றோன் பெட்கும் பிணையை ஆகுக* (அகம். 86)

எனப் பெண்ணுக்குத்தான் கற்பு வழுவாநிலை வற்புறுத்தப்படுகிறதே யன்றி ஆணுக்கன்று.

திருமண நிகழ்ச்சிகள் எல்லாம் முறைப்படி முடிந்த பின்னர் தலைநாள் இரவு வருகிறது. அந்த இரவில் புதிதாகத் திருமணமான பெண் உடல்முழுவதும் புத்துடையால் மூடியவண்ணம் படுத்திருக் கிறாள். அவளை அணுகிய ஆடவன் அவளிடம் "காற்றுப் போவதற்காகக் கொஞ்சம் திறவாய்" எனக் கூறி அப்புத்தாடையை எடுத்துவிடுகிறான். இதனால் நாணமுற்ற பெண் தனது மறைத்தற்குரிய உறுப்புக்களை விரைந்து தலைமயிரைக் கொண்டு மறைத்துக் கொண்டு தன் கணவனிடம் இறைஞ்சி நிற்கிறாள். இந்த நிகழ்ச்சியைக் கூறும் கணவன்,

*தமர் நமக்கீந்த தலைநாள் இரவின்*
*உவர் நீங்க கற்பின் எம் உயிருடம்பு* (அகம். 136)

எனக்கூறித் தலைவி வெறுப்பு நீங்கிய கற்பினையுடையவள் என்கிறான்.

பெண்ணிடம் மட்டுமே எதிர்பார்க்கப்படும் இப்பண்பு குறித்து பரத்தையிடம் சென்று வந்த தலைவன் ஒருவனை அவன் மனைவி கடிந்து கொள்ளும் நேரத்தில், அவள் பேசுவதிலிருந்தும் அறிய முடிகிறது. பரத்தையிடம் போய்வந்த கணவன் மனைவியை நோக்கி "மாசில் கற்பின் புதல்வன் தாயே" என விளிக்கிறான். அவளோ நீ இவ்வாறு பொய்மொழி கூறி எனது முதுமையைக் குறித்து ஏளனம் செய்யாதே என்கிறாள்.

*மாசுஇல் கற்பின் புதல்வன்தாய்! என*
*மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி எம்*
*முதுமை எள்ளல் அஃது அமைகும் தில்ல* (அகம். 6)

பெண்ணிற்குக் கொடுக்கக்கூடிய உயர்ந்த அடைமொழியான "குற்றமற்ற கற்பினையுடைய என் புதல்வனின் தாயே" என்பது, தன் மனைவியை மதியாது பரத்தையிடம் சென்று வந்த கணவனின் கூற்றாக அமைவது அக்காலத்தில் பெண்களிடம் எதிர்பார்க்கப்பட்ட பொறையைத்தான் எடுத்துக்காட்டுகிறது போலும். பெண்ணிடம் குற்றமற்ற கற்பை எதிர்பார்க்கிறான் ஆடவன். அதே நேரத்தில் அத்தகைய பண்பு ஆடவனுக்கும் இருக்கவேண்டும் என்ற ஒரு எதிர்பார்ப்பு அக்காலச் சமுதாயத்தில் இருக்கவில்லை என்பது தெளிவாகப் புலனாகிறது.

ஆண்கள் புணர்ச்சி சுதந்திரம் உடையவர்களாக இருந்ததனால் பரத்தையர் மிகுந்தனர். கணவன் பரத்தமை ஒழுக்கம் உடையவன் என்று அறிந்த பிறகும் கூட "இப்பிறப்பில் தனக்குக் கணவனாக இருப்பவனே மறுபிறப்பிலும் நெஞ்சில் நிறைந்தவனாக இருக்கவேண்டும்" என விரும்பும் தலைவியின் கூற்று தலைவனின் புணர்ச்சி சுதந்திரத்தைத் தலைவி பொறுத்துக் கொண்ட நிலையைச் சுட்டுகிறது.

*இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீயாகியர் என் கணவனை*
*யானாகியர் நின்நெஞ்சு நேர்பவளே* (குறுந். 40)

என தலைவி கூறுவதைக் காண, அவளின் பொறையுடைமை புலப்படுகிறது.

ஆணின் கையில் கணிசமான அளவுக்குச் செல்வம் குவிந்ததிலிருந்துதான், இந்த செல்வத்தைப் பிற குழந்தைகளுக் கல்லாமல் தன் சொந்தக் குழந்தைகளுக்கு விட்டுச் செல்ல வேண்டுமென்ற விருப்பத்திலிருந்துதான் ஒருதார மணம் தோன்றியது. இந்த நோக்கத்திற்குப் பெண் ஒருதார மணத்திலிருப்பது மிக அவசியம். ஆனால் ஆணுக்கு அப்படி அவசியமில்லை. எனவே பெண்ணுக்குரிய இந்த ஒருதார மணம் ஆண் பழகும் வெளிப்படையான அல்லது மறைவான பலதார மணத்திற்குத் தடையாயிருக்கவில்லை என்ற எங்கெல்ஸின் கருத்து தமிழ்ச் சமுதாயத்திற்கும் பொருத்தமாயிருத்தலைக் காண்கிறோம்.

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தை ஒழுக்கம் ஒருவகைக் குடும்ப ஒழுக்கம் போலவே பரவிக் கிடந்தது. இடையறா இன்பப் புணர்வுக்கென்று கணவன்மார்கள் 'வைப்பு' எடுத்துக்

கொள்ளும் பழக்கம் சமுதாய மரபுபோல் ஊறி நின்றது என்னும் வ.சுப. மாணிக்கம் அவர்களின் கருத்து ஒப்பநோக்கத்தக்கது.

மணமான ஆண்கள் தங்களது காம இச்சைக்கு வடிகால் களாகக் காமக்கிழத்தியரையும், பரத்தையரையும் பயன்படுத்திக் கொண்டு மணந்த மனைவியரை வெறும் பிள்ளைப்பேற்றிற்குரிய கருவியாகப் பயன்படுத்திக் கொள்வதை மருதப் பாடல்கள் நெடுகிலும் காணலாம்.

"தாயுரிமை தூக்கியயெறியப் பெற்றது பெண்ணினம் உலக வரலாற்று ரீதியில் பெற்ற முதல் தோல்வியாகும். வீட்டிலேயும் ஆட்சி சுதந்திரத்தை ஆண் கைப்பற்றினான். பெண் இழிநிலைக்குத் தள்ளப்பட்டாள். ஆணின் காமஇச்சைக்கு அடிமையானாள். கேவலம் குழந்தைகளைப் பெறும் சாதனமாக ஆகிவிட்டாள்" என்ற எங்கெல்ஸின் கூற்ற அப்படியே நமது பண்டைச் சமுதாயத்திற்கும் பொருந்தியுள்ளமையைக் காணலாம்.

பரத்தையரை நாடிச் செல்லும் தலைவனைத் தலைவி கண்டிக்கக் கூடாது. அப்படிக் கண்டித்தால் என்ன நேரும் என்பதை ஒரு தோழி தலைவியிடம் எச்சரிக்கிறாள். தலைவன் நிரந்தரமாகத் தலைவியை விட்டுப்பிரிய, தலைவி தம்மிடமிருந்த சிறிதளவு அரிசியைப் புடைத்துத் தாமே சமைத்துண்டு தனியாளாய் ஆகி மெலிந்து வருந்தும் நிலை ஏற்படும். அப்போது தேன்போலும் இனிய மொழியினையுடைய குழந்தைகள் பால் இன்றி வற்றிய முலையினைச் சுவைத்துப் பார்த்து ஏக்கம் கொள்வர் என்ற செய்தி மருதநிலப் பெண்ணின் அவலத்தைச் சுட்டிக் காட்டுகிறது.

*பரத்தமை தாங்கலோ இலன் என வறிதுநீ*
*புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை!*
*அது புலந்து உறைதல் வல்லியோரே*
*செய்யோள் நீங்க சில்பதம் கொழித்து*
*தாம்அட்டு உண்டு தமியர் ஆகி*
*தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப*
*வைகுநர் ஆகுறல் அறிந்தும்*
*அறியார் அம்ம அஃது உடலுமோரே!* (அகம். 316)

இவற்றிலிருந்து நாம் அறிவது சமுதாயத்தில் ஆதிக்கநிலை எய்திவிட்ட ஆண், தனது சொத்துக்களுக்கான வாரிசைப்

பெற்றுதரும் ஒரு பெண்ணைப் பலர் அறியத் தனது வாழ்வோடு இணைத்துக் கொண்ட ஒரு நிகழ்ச்சியே திருமணம். மற்றபடி 'ஒருவனுக்கு ஒருத்தி' என்று பேசப்படுகின்ற உயரிய கோட்பாடு சங்ககால வாழ்வியலுக்குப் பொருந்துவதாயில்லை எனலாம்.

**உடைமை – விளக்கம்**

ஒருவருக்கு உரிமையுள்ள பணமதிப்புடைய பொருளை உடைமை எனப் பொதுவாகக் குறிப்பிடலாம். இதனைத் தமிழில் 'சொத்து' எனவும் ஆங்கிலத்தில் 'Property' எனவும் குறிப்பிடு கின்றனர். ஆனால் நம் தமிழிலக்கியத்தில் உடைமை என்னும் சொல் பொருளையும், பண்பையும் குறிக்கப் பயன்பட்டிருத்தலைக் காணலாம்.

'செல்வர்கள் முரசங்களையும், குதிரைகளையும் உடையவர் களாய் இருந்தனர்' (அகம். 156) எனவும் 'நயனும், நண்பும், நாணும் நன்குடைமையும்' (நற். 160.1) எனவும் வரும் செய்திகள் இக்கருத்தை உறுதிப்படுத்துகின்றன.

அடக்கமுடைமை, அருளுடைமை, அறிவுடைமை, அன்புடைமை, ஊக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நாணுடைமை, பண்புடைமை, பொறையுடைமை என்றெல்லாம் வள்ளுவர் மனிதப் பண்பாட்டை வரையறுப்பதைக் காண்கிறோம். ஆக, உடைமை அல்லது சொத்து என்பது பருப்பொருளையும், பருப்பொருளுக்கும் மனிதனுக்கும் இடையே நிலவும் உறவுத்தன்மை பற்றிய கருத்துப் பொருளையும் ஒரு சேரக் குறிப்பது எனலாம்.

எனவே உடைமை என்பது வெறும் பொருள் அல்ல. மனிதனுக்கும் பொருளுக்கும் இடையேயுள்ள உறவு மட்டுமல்ல. பொருளுக்கும், மனிதனுக்கும் இடையேயுள்ள உறவும் இவை எல்லாவற்றையும் விட முக்கியமாக உற்பத்தி சாதனங்களுடன் மனிதர்கள் கொண்டுள்ள உறவின் மூலம் சக மனிதர்களுக்கிடையே நிறுவப்படுகின்ற – நிலவுகின்ற பொருளாதார உறவுகளுமே சொத்துடைமை ஆயிற்று எனக் கொள்ளலாம்.

**உடைமைக்கும் குடும்பத்திற்கும் உள்ள தொடர்பு**

மானிடவியலார் கொள்கைப்படி சமூகம் காட்டுமிராண்டி நிலை, அநாகரிக நிலை இவற்றைக் கடந்து நாகரிக நிலைக்கு வந்துள்ளது. இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தி வந்த

காட்டுமிராண்டி நிலையில் வில், அம்பு முதலிய கருவிகளே உடைமைகளாக இருந்தன. கால்நடை வளர்ப்பு, நிலச் சாகுபடி பற்றிய அறிவு பெறப்பட்ட நிலையில் மிருகங்களும் நிலமும் குடும்பச் சொத்தாக இடம்பெற்றன. கைத்தொழிலும் கற்றுக் கொண்டு கருவிகள் மூலம் உற்பத்தியைப் பெருக்கிய நாகரிக நிலையில் தனியுடைமை வளர்ந்து வரும் நிலை ஏற்படுகிறது.

தொல்காப்பியர் காலத்தில் ஒருதார மணமுறை வழங்கி வந்ததனால் தனிக்குடும்பங்கள் மிகுந்து விளங்கின. இக்குடும்ப உறுப்பினர்கள் தங்களுக்கு வேண்டிய உணவு, உடை, இருப்பிடம் இவற்றைத் தங்கள் உழைப்பின் மூலமாகப் படைத்துக் கொண்டனர் இவ்வாறு உழைப்பின் மூலம் பெற்றவை உடைமைகளாக அமைந்தன.

சமூகத்துக்குக் குடும்பம் எவ்வாறு அடிப்படை நிறுவனமாக அமைகிறதோ அவ்வாறே பொருளியலுக்கு உடைமை அடிப்படையாக அமைகிறது. இவை இரண்டுமே அடிப்படைத் தொடர்பு கொண்டவை.

## தனியுடைமையும் நிலவுடைமையும்

மானிட சமுதாயத்தின் படிநிலை வளர்ச்சியை 1. புராதன பொதுவுடைமைச் சமுதாயம், 2. ஆண்டான் – அடிமைச் சமுதாயம், 3. தனியுடைமைச் சமுதாயம், 4. நிலவுடைமைச் சமுதாயம் எனப் பகுத்துரைப்பர் அறிஞர்.

இவற்றுள் தனியுடைமைச் சமுதாய அமைப்பும், அதன் வளர்நிலையிலான நிலவுடைமைச் சமுதாய அமைப்பும் பரவியிருந்த தன்மையைச் சங்க இலக்கியப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

வேட்டைக் கருவிகளும், ஆடு, மாடுகளும் தனி மனிதனின் உடைமைகளாக இருந்து நிலையைத் தனியுடைமைச் சமுதாயம் எனவும், வளம்மிக்க நிலங்களும், நிலப்பகுதிகளால் சூழப்பட்ட ஊர்களும் வலிமைமிக்க மருதநிலத் தலைவனின் ஆதிக்கத்தில் இருந்த நிலையை நிலவுடைமைச் சமுதாயம் எனவும் கொள்ளலாம்.

## மருதத்தில் தோன்றிய நிலவுடைச் சமுதாயம்

தனியுடைமைச் சமுதாயத்தின் வளர்ந்த வடிவமான நிலவுடைமை சமுதாய அமைப்பின் தொடக்க நிலையை மருதப் பாடல்களின் வாயிலாக அறிய முடிகிறது. குடும்பத்தில் ஆணே உயர்ந்தவன்; ஆண் குழந்தையே விரும்பத்தக்கது என்ற சிந்தனை நிலவுடைமைச் சிந்தனை எனலாம்.

*யாவரும் விழையும்*
*பொலந்தொடிப் புதல்வனைத்*

தெருவிலே கண்ட மாத்திரத்தில் "என் உயிரே வருக" என வாரி அணைக்கும் பரத்தையை இங்கு நம்மால் காண முடிகிறது.

கழங்கினையொத்த முத்துக்களுடன் சிறந்த அணிகளையும், பெரும் வளம்மிக்க ஊர்களையுமுடைய பல வேல் படைகளையுடை எவ்வி (அகம். 126), வெற்றி பொருந்திய வேலையும், மழைத்துளி போன்ற மிக்க அம்பினையும், மேகம் போலும் கரிய கேடயத்தையும் உடைய பழையன் (அகம். 186), நெற்குவியல்களையுடைய உறையூரை உடையவனான தித்தன் (அகம். 6), பல வேல் படைகளையுடைய மத்தி (அகம். 226), தன்னை நாடிவரும் பரிசிலர்க்கு யானைகளையும், நல்ல அணிகலன்களையும் வழங்கக்கூடிய அஃதை (அகம் 76) முதலிய மருதநிலத் தலைவர்கள் தமது வலிமையினால் நிலங்களையும், ஊர்களையும் உரிமையாக்கிக் கொண்ட நிலையை நாம் பல பாடல்கள் வாயிலாக அறிகிறோம்.

திருமணமே குடும்பத்திற்கு அடிப்படை என்ற அளவில் அகநானூற்று மருதப்பாடல்களிலே காட்டப்படுகின்ற தமிழர் திருமண முறையே தமிழகக் குடும்ப உருவாக்கத்திற்கு அடிப்படையாய் அமைந்தது என்பதையும், குடும்ப உறவு ஆணை வெளியிடங்களிலும், பெண்ணை வீட்டிற்குள்ளும் நடமாட விட்டது என்பதையும், வெளித் தொடர்புகளில் ஈடுபட்ட ஆண் புணர்ச்சிச் சுதந்திரம் மிக்கவனாக ஆனதோடு, குடும்பப் பெண்களுக்குக் கற்பை வலியுறுத்தினான் என்பதையும் இவ்வியலில் கண்டோம். தனியுடைமையின் வளர்ச்சியே நிலவுடைமை என்பதையும் மருதநிலச் சமூக அமைப்பு நிலவுடைமைச் சமூக அமைப்பு என்பதையும் அறிந்தோம்.

# அரசும் நிறுவனமயமாதலும்

இனக்குழுச் சமுதாய அமைப்பு சிதைவுற்று நாகரிகச் சமுதாய அமைப்பு மலர்கின்ற காலக்கட்டமே மனித வரலாற்றில் மிகவும் முக்கியமான பகுதி. இம்மாறுதல் நிகழும் காலத்தில் 'இனக்குழு' முறை அழிகிறது. உழவுத்தொழில் சமுதாயங்களால் இனக்குழு வாழ்க்கை அழிக்கவும் படுகிறது. புதிய சமுதாயத்தில் அரசு தோன்றி உழுவித்து உண்போரது வர்க்கக் கருவியாகச் செயல்படுகிறது. இதன் தலைவன் அரசன் இவ்வாறு தோன்றிய அரசு தனது நிலைத்திருத்தலுக்கான தேவையை ஒட்டிப் படிப்படியே ஒரு நிறுவனமாக இறுக்கம் பெற்றது.

**அரசு – விளக்கம்**

ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழ்கின்ற மக்கள் சமுதாயத்தை மேலாண்மை செலுத்துகின்ற ஒரு நிறுவனத்தையே அரசு என்கிறோம்.

'சமுதாயத்திலிருந்து தோன்றிய, சமுதாயத்திற்கு மேலாகத் தன்னை உயர்த்தி வைத்துக் கொண்டு சமுதாயத்திலிருந்து மேலும் மேலும் தன்னை வேறாகப் பிரித்துக்கொண்டு செல்லும் சக்தியே அரசு' என்று விளக்கம் தருவார் எங்கெல்ஸ்.

'அரசு ஆதிகாலத்திலிருந்து வந்ததல்ல. அது இல்லாமலேயே சமுதாயங்கள் இருந்து வந்துள்ளன. அச்சமுதாயங்களுக்கு அரசு பற்றியோ, அரசு அதிகாரம் பற்றியோ ஒன்றும் தெரியாது. பொருளாதார வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட காலத்தில் சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுபடுவதுடன் இது அவசியகரமாகப் பிணைக்கப்பட்டிருந்தது. இப்பிளவின் காரணமாக அரசு அவசியமாகிவிட்டது' என அவரே மேலும் குறிப்பிடுகிறார்.

'அரசு என்பது உடைமை வர்க்கத்தின் ஸ்தாபனம். உடைமையற்ற வர்க்கத்திடமிருந்து அதைப் பாதுகாக்கவே இது இருக்கிறது' என்கிறார் அவரே மேலும்.

இவற்றிலிருந்து மனித சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவு படாதிருந்த புராதன பொதுவுடைமைச் சமுதாயத்தில் அரசுகள் தோன்ற

வாய்ப்பில்லை என்பதையும், சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுபட்டதும் உடைமை வர்க்கத்தைப் பாதுகாக்க வேண்டிய தேவை எழுந்ததும் அரசுகள் தோன்றக் காரணமாயின என்பதையும் அறிகிறோம்.

**அரசின் தோற்றம்**

வரலாற்றில் முதன்முதலாக வர்க்கங்களின் தோற்றத்தோடு அரசின் தோற்றத்தையும் ஒப்பிட்டு விளக்கியவர்கள் மார்க்சும், எங்கெல்சும் ஆவர்.

> *"வர்க்க பேதங்களைக் கட்டுப்பாட்டிலும், தன் ஆதிக்கத்திலும் வைத்திருக்கவேண்டிய தேவையில் உருவான அரசு, வர்க்க மோதல்களில் செழுமை பெற்று உருவானது. பொருளாதார மேலாதிக்கமும் அதனால் அதிக வலிமையும் பெற்ற வகுப்பார், அரசியல் நிலையிலும் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி, உடைமைகளையும் கருவிகளையும் கையகப்படுத்தி வர்க்கச் சுரண்டலைத் தோற்றுவித்தனர்."*

என்னும் எங்கெல்சின் கருத்து வர்க்க மோதலால் அடக்குமுறை கருவியாக உருவான அரசியல் தோற்றத்தை விளக்குகிறது.

தமிழகத்தைப் பொருத்தவரையில் குறிஞ்சி நிலத்தில் அமைந்த வேட்டைச் சமூக அமைப்பிலோ, முல்லை நிலத்தில் ஏற்பட்ட கால்நடைச் சமூக அமைப்பிலோ அரசுகள் தோற்றம் பெறவில்லை. மாறாக இனக் குழுத் தலைவர்கள் பலர்தோன்றி மக்கள் மத்தியில் செல்வாக்கும் பெற்றுள்ளனர் ஆனால் மருத நிலத்தில் உருவான வேளாண் சமூக அமைப்பிலேதான் அரசுகள் தோன்றியிருக்க வேண்டும். மருதநில மக்களின் நிலைத்த வாழ்வும், நிலையான குடியிருப்பு அமைப்பும், நிலங்களின் விளைச்சலில் கிடைத்த அதிகப் படியான உபரியும் அரசுகள் தோன்றக் காரணமாக இருக்கலாம்,

> *"நகரங்கள் முதன்முதலில் தோன்றியது உழவுத் தொழிலிற் சிறந்த மருதநிலத்திலேயே. உழவுத் தொழிலும், நிலையான குடியிருப்பும், ஊர்ப் பெருக்கமும் நாகரிகம் தோன்றுவதற்குப் பெரிதும் துணை செய்தன. நிலையாகக் குடியிருப்பதனால்*

> *உழவன் குடியானவன் எனப் பெயர் பெற்றான். 'இல்வாழ்வான்' எனத் திருவள்ளுவரால் சிறப்பித்துச் சொல்லப்பெற்றவனும் உழவனே" என்று அறுதியிட் டுரைக்கும் பாவாணர், நிலையான குடியிருப்பால் ஒழுக்கப் பொறுப்பும், ஊர்ப்பெருக்கமும், ஆட்சியமைப்பும் ஏற்பட்டன*

என்பார்.

## ஆதிக்க வளர்ச்சியும் அரசு உருவாக்கமும்

வேளாண் சமூக அமைப்பிலும் அனைவருமே ஆதிக்கம் செலுத்தும் நிலையில் இல்லை. வலிமையும் படையும் கொண்ட ஒரு சிலரே ஆதிக்க நிலை எய்திக்கொண்டிருக்க, ஏனையோர் உழைக்கும் வேளாண் குடிகளாகவே வாழ்ந்து வந்துள்ளமையைச் சங்க இலக்கியங்களில் காண்கின்றோம்.

தொல்காப்பியம் சமூக ஏற்றத் தாழ்வுகள் குறித்துப் பல சூத்திரங்களில் கூறுவது பலரும் அறிந்ததே. வருணங்களைப் பற்றிப் பேசுவதோடமையாது இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தரிடையே வேறுபாடு கற்பித்துக் காட்டுகின்றது. நால்வகை நிலங்களைப் பற்றிப் பேசுமிடத்துத் திணைப் பெயர்களைக் குலப்பெயர்கள் என்றும் தலைமக்கள் பெயர்கள் என்றும் பாகுபாடு செய்கின்றது. தொல்காப்பிய உரையாசிரியர்கள் மருத நிலத்தில் வழங்கும் குலப்பெயர்களாகக் களமர், உழவர், கடையர், கடைசியர், உழத்தியர் என்பனவற்றைக் கூறிவிட்டு அந்நிலத்தின் உரிப்பொருளுக்குரிய தலைமக்கள் பெயர்களாக மகிழ்நன், மனையோன், ஊரன் என்பவற்றைக் காட்டுவர். நாடன், ஊரன், கிழவன் என்னும் சொற்கள் ஆதிக்க நிலை எய்திக் கொண்டிருந்த தலைமக்களைக் குறித்தன எனக் கொள்வதில் தவறில்லை என்பார் அறிஞர் கைலாசபதி.

இந்தச் சமூகத்தில் தமிழ் மக்கள் உற்பத்திச் சக்திகளுக்கும், தங்களுக்கும் உள்ள உறவு காரணமாக இருபிரிவாகப் பிரிந்தனர். ஒன்று 'நிலக்கிழார்' அல்லது நில உடைமையாளர், மற்றொரு பிரிவினர் அவற்றில் உழைத்துப் பிழைக்கும் உழவர்கள் என்ற அறிஞர் நா. வானமாமலை கருத்தும் இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

மார்கன், எங்கெல்ஸ், மார்க்ஸ் ஆகியோர் உற்பத்தி அடிப்படையும், வலிமை அடிப்படையுமே இனக்குழுத் தலைமைக்கும், அரசு தலைமைக்கும் அடிப்படை என்று விளக்கினர். பொருளாதார ஆதிக்கம் மிக்க குழு, அதனினும் குறைந்த இனக்குழுவைத் தனது வலிமையால் அடிமையாக்கிற்று என்பது அவர்தம் கோட்பாடு. தமிழ் நிலத்திலும் இக்கோட்பாடு பொருந்துமாற்றைக் காண்கிறோம்.

## அரசின் தலைவன் வேந்தனே

பழங்காலத்தில் ஏர்த்தொழில் செய்தவரே போர்த் தொழிலையும் மேற்கொண்டனர். ஏரையும், போரையும் ஒருங்கே கொண்டிருந்த காரணத்தால் இவர்களிடமிருந்தே வேந்தர்கள் தோன்றியுள்ளனர்.

மன்னன், வேந்தன், அரசன் என்றெல்லாம் வழங்கப்படுகின்ற தனித்தனி சொற்களை எடுத்துக்கொண்டு மன்னனுக்கு மேம்பட்ட நிலையை எய்தியவன் வேந்தன்; வேந்தனுக்கு மேம்பட்ட நிலையை எய்தியவன் அரசன். அவனது ஆட்சியே அரசு என்றெல்லாம் புது விளக்கம் கொடுக்கச் சிலர் முன்வந்துள்ளனர். இது தவறான போக்காகும்.

மன்னன், வேந்தன், அரசன் என்பன ஒரு பொருட்பன்மொழி என்பதை நாம் நினைவில் கொள்வோம். நிலையான ஆட்சியைத் தந்ததால் மன்னன் எனவும், அனைவரையும் போரில் வென்று முடியணிந்ததால் வேந்தன் எனவும், அருமைமிக்க ஆட்சியைத் தந்த காரணத்தால் அரசன் எனவும் பண்டைத் தமிழரசின் தலைவன் அழைக்கப்பட்டான். 'வேந்தன் என்னும் பெயர் வேய்ந்த் தோன்' என்பதன் மரூஉ. வேய்தலாவது முடியணிதல் என்பார் பாவாணர். மருத நிலத்தில் வாழ்ந்த தலைவனே இவ்வாறு அழைக்கப்பட்டான் என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

குறிஞ்சி, முல்லை, நிலங்களில் வாழ்ந்து வந்த குலச்சமுதாயத் தலைவர்களை மருதநில வேந்தர்கள் வென்று தமது அரசை நிலை நிறுத்தினர். நால்வகைப் படைகளின் இறுமாந்த தோற்றத்தோடும், மருத நில விளைச்சலின் ஆற்றலோடும் வந்து மோதிய வேந்தர்களுக்கு முன் இயற்கைப் பொருளாதாரத்தையும் தம்மையும் மட்டுமே நம்பி வாழ்ந்த பாரி முதலான குறுநிலத் தலைவர்கள் நிற்க இயலாமல் அழிந்ததில் வியப்பில்லை என்ற அறிஞர் கோவை ஞாநி கருத்தும் இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

**மருத நிலக் கடவுள் வேந்தனா. . . இந்திரனா?**

வீரச் செயல்புரிந்த முன்னோர்களையும் அவர்களின் நடுகல்லையும் வணங்குவதே தமிழர்தம் கடவுட் கொள்கை. அதனடிப்படையில் மருதநில மக்கள் தம் குலத்து முன்னோடியான வேந்தனைக் கடவுளாக எண்ணி வழிபட்டனர்.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையாகச் சொல்லவும் படுமே* (தொல். பொருள். 5)

என்கிறார் தொல்காப்பியர். இங்கு குறிக்கப்படும் வேந்தனே தீம்புனல் (வயலும், வயல் சார்ந்த இடமுமான மருதம்) நிலத்தின் கடவுளாவான். தொல்காப்பியர் இலக்கணப்படி மருத நிலக் கடவுள் வேந்தன் என்றே அறிகிறோம். பின் ஏன் உரையாசிரியர்கள் மருதநிலக் கடவுளை வேந்தன் என்று குறிக்காமல் இந்திரன் என்றே குறித்தனர் என்பதற்கு மறைமலை அடிகள் பின்வருமாறு விளக்கம் தருகிறார்.

*"ஆரியர்களின் இந்திரன் இடி, மழை, மின்னல் முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர்தம் பகைவரோடு போராடுங்கால் அவருக்கு உதவி புரிந்து வெற்றியைத் தருபவனாகவும், அவர்களுடன் சோமபானம் (மது), விலங்கின் இறைச்சி போன்ற வற்றை நிறைய உட்கொண்டு அவர் வேண்டிய நலன்களையெல்லாம் அவருக்கு விளைவிப்பவ னாகவும் சொல்லப்படுகிறான். தமிழர் வணங்கிய இந்திரனோ (வேந்தன்) வயலும், வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டுமே வேண்டி வணங்கப்பட்ட மழைக்கடவுள் ஆவான். வேறு எதன் பொருட்டும் அவன் வணங்கப்பட்டவன் அல்லன். இருக்கு வேதத்தில் உள்ள பாட்டுக்களில் மூன்றில் ஒரு கூறு இந்திரன் மேல் செய்யப்பட்டிருத்தல் போல, தமிழ் நூல்களில் எங்கும் ஒரு பாட்டேனும் இந்திரன்*

*மேல் செய்யப்படவில்லை. தொல்காப்பியம் முதலான மிகப் பழைய தமிழ் நூல்களில் இந்திரன் என்னும் சொல்லே காணப்படவில்லை. மருதநில மக்களால் கொண்டாடப்படும் தெய்வம் வேந்தன் என்றே சொல்லப் படுகிறது. தமிழருக்குரிய வேந்தனுக்கும், இருக்கு வேத ஆரியருக்குரிய இந்திரனுக்கும் ஏதோர் இயைபும் இல்லை என்பது நன்கு விளங்கும். உற்று ஆராயுங்கால் தமிழர்க்குரிய வேந்தன் என்போன் தமிழர்க்குள் முதன்முதல் தலைவனாய்த் தோன்றி, மழை பெய்யும் காலமும், அம்மழையின் உதவியாய் பயிர் செய்வதற்கேற்ற வளவிய நிலமும், அந்நிலத்தைத் திருத்திச் செவ்வனே பயிர் விளைவிக்கும் வகைகளும் நன்குணர்ந்து உழவுத் தொழிலைக் கற்பித்துத் தமிழ்மக்களை மேல் நிலைக்குக் கொணர்ந்தவன் ஆதல் வேண்டு மென்பது புலப்படும் நன்றி செய்த முன்னோரை நினைத்து அவர்களைப் பரவுதல் (வழிபடுதல்) தமிழர்க்கு இயற்கையாதலால் அவர் வழியில் வந்த மருதநிலத்து உழவர் முதல் வேந்தனான அவனது ஆவியை வேண்டி வணங்குவாராயினர் என்க.*

வேளாண் நாகரிகம், ப. 58

என்பார்.

*வேந்தன் = அரசன் முற்காலத்தில் அரசனும் தெய்வமாக வணங்கப்பட்டான். அதனால் இறைவன் என்னும் பெயர் அரண்மனைக்கும் தெய்வக் கோட்டத்திற்கும் பொதுவாயின. வேந்தன் இறந்த பின் வானவர்க்கும் அரசனாகி வானுலகத்தினின்று மழையைப் பொழிவிக்கின்றான் என்று பண்டை மருதநில மக்கள் கருதியதால் மழைத் தெய்வத்தை வேந்தன் என்னும் பெயரால் வணங்கி வந்தனர்*

என்னும் பாவாணர் கருத்தும் ஈண்டு பொருத்திப் பார்க்கத் தக்கது.

இவற்றிலிருந்து மருதநிலத்து மக்கள் வணங்கிய வேந்தன் அவர்களது குல முன்னோன் என்பதை உணரலாம். மேலும் மழைவேண்டி வழிபட்ட ஆரியர்களின் தெய்வமான இந்திரனும் மருதநிலக் கடவுளான வேந்தனும் ஒன்றெனக் கருதபடலாயினர். தமிழர் தம் தெய்வக் கோட்பாடு முன்னோர்களின் வழிபாடு என்பதை நாம் இங்கு நினைவில் கொள்ளவேண்டும்.

## அரசு ஒரு நிறுவன அமைப்பாதல்

சங்ககாலத் தமிழகத்தில் ஒயாது போர், படையெடுப்பு, ஊர் அழிப்பு அரசுரிமைச் சண்டை ஆகியவற்றின் அடிப்படையிலேயே மெல்லமெல்ல அரசுகள் தோன்றின. இப்படித் தோன்றிய அரசுகள் காலப்போக்கில் தம்மை நிலைநிறுத்திக் கொண்டு விரிவுப்படுத்தத் தொடங்கின. பின்னர் படிப்படியே ஒரு நிறுவனமாக வளர்ச்சியுறும் நிலையைக் காண்கிறோம். “வேல்மிகு வேந்தன்”, “தண்படையாளும் வேந்தன்”, “வியன்தானை விறல்வேந்து”, “அண்ணல் யானை வேந்தர்”, “வேந்தர் வென்றெறி முரசு”, “பணைகெழு வேந்தர்”, “பல்படைத்தானை” போன்ற தொடர்கள் வேந்தருக்கு வேல், யானை, படை, முரசு போன்ற கருவிகள் இருந்த நிலையைத் தெரிவிக்கின்றன என்பார் அறிஞர் அ. ஆறுமுகம்.

## மூவேந்தர்கள்

சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவேந்தர்களின் வீரச் சிறப்பினை மருதப்பாடல்களில் காண்கிறோம்.

இமயம் வரை படையெடுத்துச் சென்று ஆரிய மன்னரை அலறடித்து சிறைபிடித்து, இமயமலையில் தனது விற்கொடியைப் பறக்கவிட்டதோடு அவ்வெஞ்சின வேந்தரைப் பிணித்து, அவர்கள் தலையில் கல்லேற்றி கொண்டு வந்த சேரன் செங்குட்டுவன் பற்றியும் (அகம். 396), பாண்டிய நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னுமிடத்தில் சேரன், சோழன் ஆகிய வேந்தர்களையும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மாள், பொருநன் ஆகிய குறுநில மன்னர்களையும் ஒருங்கே வென்ற திறன் பற்றியும் (அகம். 26) மருதப்பாடல்களின் வாயிலாக அறிகிறோம்.

மேலும் படுவூர்ப் பறந்தலை என்னுமிடத்தில் நடந்த போரில் சோழர், சேர, பாண்டியரை வென்ற வரலாறும் (அகம். 96),

கடற்போர்க்களத்தில் பாண்டியர் சேர, சோழர்களை வெற்றி கொண்ட வரலாறும் (அகம். 116), வென்னி பரந்தலை என்னுமிடத்தில் கரிகாற்சோழன் தன் எதிரிகளோடு நடத்திய போர்ச் செய்தி பற்றியும் (அகம். 246) கூறப்படுகின்றன.

இவ்வாறு தமிழகத்தில் மூவேந்தர்களும் தங்களை நிலைப்படுத்திக் கொண்டு ஒருவர் ஏனையோருடன் போர்புரிந்த நிலையைச் சங்கப்பாடல்கள் வாயிலாக அறிகிறோம்.

## ஆரியப்படை கடந்தோர்

ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் நாம் அறிவோம். அதேபோல் சோழர்களும் ஆரியப்படையை முறியடித்து செய்தியை அகநானூற்று மருதப்பாடல்கள் மூலமாக அறிகிறோம். சோழ நாட்டின்கண் உள்ள வல்லத்தின் புறத்தே ஆரியர் படையெடுத்து வர சோழர்கள் அதனை முறியடித்து செய்தியும் (அகம். 336), மற்போரில் வல்ல பாணன் என்பான் ஆரியப் பொருநன் ஒருவனுடன் மற்போர் புரிந்து அவனை அழித்த செய்தியும் (அகம். 386) மருதப்பாடல்களில் காணக்கிடக்கின்றன.

## குறுநில மன்னர்கள்

சேர, சோழ, பாண்டிய அரசுகள் வலிமை வாய்ந்த நிறுவன அமைப்புகளாக வளர்ந்து கொண்டிருந்த அதே வேளையில்

| | |
|---|---|
| *அஃதை* | *(அகம். 76, 92)* |
| *ஆதன் எழினி* | *(அகம். 216)* |
| *ஆய் எயினன்* | *(அகம். 396)* |
| *எழுமையூரன்* | *(அகம். 36)* |
| *எவ்வி* | *(அகம். 126, 266, 366)* |
| *கணையன்* | *(அகம். 386)* |
| *கோதை மார்பன்* | *(அகம். 216)* |
| *நிமிலி* | *(அகம். 396)* |
| *செம்பியன்* | *(அகம். 36)* |
| *செல்லிக்கோமான்* | *(அகம். 216)* |

| | |
|---|---|
| *திதியன்* | *(அகம். 36, 126, 196)* |
| *தித்தன்* | *(அகம். 6, 226)* |
| *நன்னன்* | *(அகம். 356, 396)* |
| *நீடூர்க்கிழவோன்* | *(அகம். 286)* |
| *பசும்பூட்பாண்டியன்* | *(அகம். 266)* |
| *பதினொரு வேளிர்* | *(அகம். 246)* |
| *பழையன்* | *(அகம். 186, 326)* |
| *பழையன் மாறன்* | *(அகம். 346)* |
| *பாணன்* | *(அகம். 226, 386)* |
| *பூரியர்* | *(அகம். 6)* |
| *மத்தி* | *(அகம். 6, 226)* |
| *மாநிதிக்கிழவன்* | *(அகம். 66)* |
| *வல்லம் கிழவோன்* | *(அகம். 356)* |
| *வேளிர்* | *(அகம். 206)* |

முதலிய குறுநில மன்னர்களும் ஆட்சிபுரிந்த வரலாற்றை மருதப் பாடல்களால் அறிகிறோம். இவர்களை இனக்குழுச் சமுதாயத் தலைவர்களின் எச்சங்களாகக் கொள்ளலாம்.

ஏனைய சமூகங்களைக் காட்டிலும் மருத நிலத்தில் அமைந்த வேளாண் சமூக அமைப்பில் அரசு தோன்றி நிலை பெற்று விளங்குவதற்கு அனைத்து வாய்ப்புகளும் இருந்த காரணத்தால் நாகரிக அமைப்புடைய இச்சமூகத்தில் மூவேந்தர்களின் பேரரசுகள் தோன்றின. அவை ஒன்றோடொன்று மாறுபட்டு மோதிக் கொண்டன. ஆங்காங்கே பல சிற்றரசர்களும் ஆட்சி புரிந்தனர் என்பதை அறிகிறோம்.

# பரத்தமையும் பண்பாட்டுறவும்

உலகம் முழுவதும் பரத்தமை பரவியிருந்ததைப் போலவே பண்டைத் தமிழ்ச் சமுதாயத்திலும் பரத்தமை இருந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. பண்டைக் காலத்தில் பரத்தமை என்பது ஒரு சமூக ஒழுக்கமாகவே நிலைபெற்றிருந்ததை மருதப் பாடல்களின் வாயிலாக அறிகிறோம். அங்கொன்று இங்கொன்றுமாக ஒரு சில எதிர்ப்புணர்வுகள் இருந்தாலும் பரத்தை ஒழுக்கத்திற்கு எதிராகப் பெரும்வீச்சை அவை உருவாக்கவில்லை. இன்றும்கூட வசதியும், வாய்ப்பும் மிக்க நிலக்கிழார்கள், தொழிலதிபர்கள், அரசியல் தலைவர்கள், திரைப்படத்துறையினர் ஆகியோரிடத்தில் பரத்தமை ஒழுக்கம் ஒரு கௌரவத்தின் அடையாளமாகவே பார்க்கப்படும் அவலத்தைக் காண்கிறோம்.

**பரத்தமை – விளக்கம்**

தன் மனைவியிடத்து மட்டும் தொடர்பு கொண்டு இன்பம் பெறுவதில் திருப்தியடையாத கணவன், வேறொரு பெண்ணுடன் தொடர்பு கொண்டு இன்பம் பெறுகிறான். அந்த வேறொரு பெண்ணையே பரத்தை என்று இலக்கியங்கள் கூறுகின்றன. பரத்தையருடன் கொண்டுள்ள ஒழுக்கத்தையே பரத்தமை என்கிறோம்.. மருதப் பாடல்களில் காமக்கிழத்தி (கலி. 68, 69. 71. 72. 74, 78, 90, 91), காதற்பரத்தை (ஐங். 37, 39, 40, 81, 87, 89, 90; குறுந். 8, 164; அகம். 376, 396); நயப்புப் பரத்தை (அகம். 336), இற்பரத்தை (குறுந். 364, அகம். 186), தலைநின்றொழுகப்பட்ட பரத்தை (நற். 150, 216), பரத்தை (ஐங். 38, 77, 78, 86, 88; குறுந். 370; நற். 100, 276, 290, 320; அகம். 76, 106, 166, 276) என இவர்கள் பல பெயர்களிட்டுக் குறிக்கப்படுகின்றனர். பரத்தையரைப் பற்றி இளம்பூரணர் 'பரத்தையராவார் யாவரெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லாராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டுந்தங்காதார்' என்று கூறுவார்.

இந்த கருத்து ஆய்தற்குரியது. பரத்தையர் பொருளுக்காகத் தன் உடலை விற்கின்றனர் என்ற கருத்து அகப்பாடல்களில் காணப்படவில்லை.

இப்பெண்டிர்களைப் பொருட் பெண்டிர்களாக, விலைமாதர் களாகத் தொல்காப்பியமும், சங்கப் பனுவல்களும் புனையவில்லை யெனவும், பரத்தையர்கள் பொருளையெல்லாம் வெளவினார்கள் என்றோ, அதுபற்றித் தலைவியர் பிணங்கினர் என்றோ மருதப் பாடல்கள் சிறிதும் மொழிந்தில எனவும் கூறுகிறார் வ.சுப. மாணிக்கம்.

ஆண்களுடன் பரவலான தொடர்பு கொண்டிருந்த காரணத்தால் இவ்வகைப் பெண்கள் 'பரத்தையர்' என அழைக்கப் பட்டனர் எனப் பொதுவாகக் கருத்து நிலவுகிறது.

பரத்தை என்ற சொல் தமிழ் வேர்ச்சொல் அன்று, பர–பிற ஸ்திரீ=த்தை = பர + ஸ்திரீ = பர = த் = தை என்ற இச்சொல் வரலாறு பரத்தையர் அயல்நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட பெண்டிரே என ஊகிக்க வைக்கிறது என்பார் டாக்டர் க.ப. அறவாணன். அவரே மேலும் பரத்தமை என்ற நிறுவன அமைப்பு போரினால் உருவாகிக் காலப்போக்கில் நிலை பெற்றிருக்க வேண்டும் என்கிறார்.

**உலகம் தழுவிய பரத்தமை ஒழுக்கம்**

உலகத்திற்கெல்லாம் தத்துவத்தையும் நாகரிகத்தையும் வழங்கிய பண்டைக் கிரேக்கம், உரோம், பாபிலோனியம் முதற்கொண்டு பண்பாட்டின் சின்னமான பாரதம் வரை பரத்தமை ஒழுக்கம் நிலை பெற்றிருந்ததை அறிஞர்கள் எடுத்துரைக்கின்றனர்.

கிரேக்கப் பரத்தையரில் நால்வகையினர் அமைந்தனர். இவர்களில் உயர்நிலை பரத்தையர் (Hetairea) இன்பத்துறையில் மட்டுமின்றி கலைப்பயிற்சியும், தேர்ந்த கல்வியும் பெற்று அறிவுத் துறையிலும், கலை நாட்டத்திலும் துணையாகும் தகுதி பெற்றவர். எனவே இவர்கள் நாட்டுத் தலைவர், அறிஞர், கலைஞர் போன்றவர்களால் விரும்பப் பெற்றனர். இவர்கள் தங்கள் தகுதிக்கேற்பச் செல்வம் மிகுந்தவர்களுக்கு மட்டுமே எட்டியவர். இதற்கடுத்த நிலையில் அமைந்தவர் இசைப் பரத்தையர் (Auletrides on Flute Players) இவர்கள் இசையிலும், கூத்திலும் வல்லவர்கள், கூத்தோடு பரத்தமையைக் கூட்டி வளர்த்தவர்கள். இவர்களினின்று வேறுபட்டவர் விலைப் பரத்தையர் (Conculines) இவர்கள் பெரும்பாலும் அடிமைகள். செல்வம் வாய்த்தோரால் விலைக்குக்

கொள்ளப்பெற்று இன்ப நுகர்ச்சிக்கும், வீட்டு வேலைகளுக்கும் பயன்படுத்தப் பெற்றனர். இவர்களினின்று வேறுபட்டுப் பலராலும் பொதுமையாக கொள்ளப்பெற்ற பொதுப்பரத்தையர் (Dietriades) கிரேக்கப் பரத்தையரில் இழிநிலையினர். இவர்கள் அனைவரும் நாட்டின் வரி விதிப்புக்கு உட்பட்டவர்கள்.

உரோமப்பரத்தையரைப் பதிவு செய்யப்பெற்றோர் (Registered) பதிவு செய்யப்பெறாதோர் (Unregistered) என இருநிலைப்படுத்துவர். ட்ராஜன் காலத்தில் (கி.பி. 98–117) முப்பத்திரண்டாயிரம் பதிவு பெற்று வரி செலுத்திய பரத்தையர் உரோம் நகரத்தில் மட்டுமே வாழ்ந்தனர் என மதிப்பிடப்பட்டுள்ளது.

வாத்சாயனாவின் காமசூத்திரம் கணிகை முதல் பொதுமகள் வரை அமையும் பரத்தையரின் படிநிலைகளை வழங்கியுள்ளது. கணிகையர் அழகிற் சிறநதவர்கள் மட்டுமன்று. தங்கள் அகவியல் பாலும் ஆடவரைக் கவர்ந்தவர். பரத்தையரில் உயர்குடியில் நின்றனர் கணிகையர். கீழ் அமையும் பரத்தையர் பல்வகையினர். உடல் அழகால் பிறரை ஈர்த்தவர் (Reepagibis). கலையும் பரத்தமையும் கலந்து வாழ்ந்தவர் (Nati), வீட்டுவேலைக்கும், இன்ப நுகர்ச்சிக்கும் உதவி பணிப்பரத்தையர் (Silpakarika), கணவன் இசைவு பெற்று பரத்தமைத் தொழில் மேற்கொண்டவர் (Swairini). மணமான பரத்தையர் (Kulata), இவர்களிலும் கீழ்நிலைப்பட்ட பொதுப்பரத்தையர் (Kumbhadesi) என்ற படிநிலைகளைக் காண்கிறோம்.

எழிலும், புனைவும், கலையும் கூட்டி இன்பம் வழங்கி விலை பெறும் பரத்தையர், இதனோடு தொடர்ந்து வேறு பணிகளையும் அரசியல் நிலையில் ஆற்றினர். பாரதம், இராமாயணம் போன்ற வடமொழிக் காவியங்களிலும் கௌடில்யரது அர்த்தசாஸ்திரம் போன்ற பொருளியல் நூல்களிலும் பரத்தையருக்குரியனவாகப் பல பணிகள் குறிக்கப் பெறுகின்றன. போர்க்களத்தில் வெற்றி விளைவிக்கும் வீரர்க்கு இன்பம் வழங்கும் பணியை மேற்கொண்டனர். அரசனது வெற்றியை எதிரேற்பதிலும், சிறந்த அரசவிருந்தினரை வரவேற்பதிலும் குறிப்பிடத்தக்க இடம்பெற்றனர். பிற மொழியறிவும், குறிப்பு மொழிப்பயிற்சியும் பெற்ற பரத்தையரும் இருந்தனர். கொடியர், கொலைஞர், அயல்நாட்டு ஒற்றர் போன்றோரை ஒற்றாடும் பணியையும் பரத்தையர் ஆற்றினர்.

இத்தகு நிலையில் சங்க இலக்கியம் பரத்தையரைப் படைத்தளிக்கவில்லை. தலைவியின் உள்ளத்தில் ஊடற் பொறியை உருவாக்கும் கருவியாகவே பரத்தையரை அக இலக்கியம் உருவகப்படுத்துகிறது.

**போர்ச் சமூகத்தில் பரத்தமை**

சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுபட்டு வர்க்கங்களுக் கிடையே நடைபெற்ற ஓயாத போரும், அப்போர்களில் ஏராளமான ஆண்கள் கொல்லப்பட்டதும், பெண்கள் அடிமைகளாகக் கொள்ளப்பட்டதும் பரத்தமைக்கு வழிவகுத்தது எனலாம். ஆடவர் எண்ணிக்கை குறைந்து பெண்டிர் எண்ணிக்கை மிகுதியாக இருந்த முற்காலப் போர்ச் சமுதாய அமைப்பில் பெண்டிர் பலர் திருமண மாகாதிருத்தல் இயல்பானது. போர்க்காலத்தில் பகை நாட்டிலிருந்து வெற்றி மன்னரால் கவர்ந்துவரப்பட்ட அயல்நாட்டுப் பெண்டிரும் உள்நாட்டு பெண்டிரோடு இணைந்து மிகுதியாயினர். போரில் தோற்ற நாட்டினர் அடிமையாக்கப்பட்டனர். பெண் அடிமைகள் பரத்தமைக்குப் பயன்படுத்தப்பட்டனர்.

தமது ஐங்குறுநூற்றுப் பதிபபின் முன்னுரையில் ஔவை சு. துரைசாமி பிள்ளை அவர்கள்,

> *அந்நாளைய சூழ்நிலை, அடிக்கடி நிகழும் போர், சமுதாய அமைப்பு ஆகியவற்றால் ஆடவர் தொகையினும் மகளிர் தொகை மிகுதற்கு வாய்ப்பிருந்தது. கட்டாண்மையுடை மக்களையே போர்த் துறையும் வேண்டி நின்றது. அவர் தொகை குன்றினமையின் மிகை மகளிர் மணக்கும் ஆடவர் இன்மையால் வரைவின் மகளிர் என உளராயினர். அவர் மனம் ஆடவர் பால் பரந்து சென்று ஒழுகினமையின் அவர் பரத்தையர் எனப்பட்டனர்.*

என உரைத்திருப்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.

**ஆணாதிக்கமும் பரத்தமை உருவாக்கமும்**

ஆணாதிக்கத்தை ஒப்புக்கொண்ட பெண்ணுக்கு ஒரு கணவன் என்னும் முறை தோன்றியது. இவ்வமைப்பில் பெண்ணுக்குக் கற்பு வரையறுக்கப்பட்டதுபோல ஆணுக்கு வரையறுக்கப்படவில்லை

என்று எங்கெல்ஸ் கருதுகிறார். ஒடிஸி, இலியாட் ஆகிய கிரேக்கக் காப்பியங்களிலிருந்து பொருத்தமான சான்றுகளையும் எடுத்துக் காட்டுகிறார். ஒருதார மணமுறையின் வெளிப்பாடே பரத்தை தோற்றத்திற்கும், பெருக்கத்திற்கும் காரணம் என்று எங்கெல்ஸ் விளக்குகிறார்.

தமிழ் இலக்கியங்களிலும் பெண்ணுக்கு வற்புறுத்தப்பட்ட அளவுக்கு ஆணுக்கு கற்பு வற்புறுத்தப்படவில்லை எனலாம். "தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்" (சிலம்பு மங்கள வரி. 27) எனக் கண்ணகியைப் பாராட்டும் இளங்கோ, கோவலனைப் பாராட்டும்போது,

> . . . . . . . . *மதிமுக மடவார்தம்*
> *மண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்*
> *கண்டேத்தும் செவ்வேளென்று இசைபோக்கிக் காதலால்*
> *கொண்டேத்தும் கிழமையான்* (சிலம்பு. மங்கள வரி. 36–39)

என்றே கூறுகிறார்.

மனைவி என்பவள் ஒருவனோடு மட்டுமே உறவுகொண்டு குடும்பத்திற்கு வாரிசான குழந்தையை அதிலும் ஆண் மகவைப் பெற்றுத் தர வேண்டும்; கணவன் என்பவன் எப்படி வேண்டுமானாலும் வாழ்ந்து யாரோடு வேண்டுமானாலும் இன்பம் நுகர உரிமையுள்ளவன் என்ற ஆணாதிக்க மனோபாவமே கணவன்மாரைப் பரத்தையரை நாடிச் செல்ல வழிவகுத்தது எனலாம்.

## மருதப்பாடல்களில் பரத்தமை

மருதப்பாடலின் உரிப்பொருள் ஊடலும் ஊடல் நிமித்தமும். தலைவனின் பரத்தமை காரணமாகவன்றி வேறு எவற்றின் காரணமாகவும் ஊடல் நிகழ்ந்ததாக அக இலக்கியங்களில் சான்றுகள் இல்லை. எனவே மருதப்பாடல் என்றாலே அவை பரத்தமை ஒழுக்கத்தைக் கூறும் பாடல்கள் என்று முடிவுக்கு வரலாம்.

அகநானூற்றின் மருதப்பாடல்கள் நாற்பதில் தலைவி கூற்றாக அமைந்த பாடல்கள் 11, தலைவன் கூற்றாக அமைந்தது 3, தோழி கூற்றாக அமைந்த பாடல்கள் 17, பரத்தை கூற்றாக அமைந்தவை 9. இவற்றின் தலைவன் கூற்றாக அமைந்த மூன்று பாடல்களைத் தவிர மற்ற அனைத்திலும் தலைவனின் பரத்தமை ஒழுக்கமே பேசப்படுகிறது. தலைவனின் கூற்றிலும் தனது பரத்தமை

ஒழுக்கத்தின் காரணமாகத் தன்மீது ஊடல் கொண்ட தலைவியோடு தான் அடைந்த இன்பத்தை எண்ணி அசைபோடுவதாகவே உள்ளது.

தலைவி கூற்றாக அமைந்த 11 பாடல்களில் 5 பாடல்களில் தலைவனிடமும் நான்கு பாடல்களில் தோழியிடமும் ஒரு பாடலில் விறலியிடமும் ஒரு பாடலில் பாணனிடமும் தலைவி பேசுவதாக அமைந்துள்ளது. இவற்றில் பரத்தையை நாடிச் செல்லும் தலைவனின் இழி செயல்கள் அங்கதச் சுவையோடும் அவலச் சுவையோடும் அவலச் சுவையோடும் எடுத்துரைக்கப்படுகின்றனவே தவிர அவற்றை எதிர்க்க முடியாததோடு ஏற்றுக்கொண்டு குடும்ப வாழ்வில் சமரசம் செய்து கொள்கின்ற நிலையையே காண்கிறோம்.

தலைவன் கூற்றாக உள்ள மூன்று பாடல்களில் இரண்டு தன் நெஞ்சிற்கே கூறுவதாகவும் ஒன்று தோழியிடம் பேசுவதாகவும் அமைந்துள்ளன. பண்டைத் தமிழரின் திருமணச் சடங்குகள் (அகம். 36, 136) தலைவன் கூற்றாலே அறிந்துகொள்ள முடிகிறது. தோழி கூற்றாக அமைந்த 17 பாடல்களில் 15 பாடல்களில் தோழி நேரடியாகவே தலைவனிடமும் 2 பாடல்களில் தலைவியிடமும் பேசுகிறாள். தலைவனிடம் பேசும்போது அவனது பரத்தைமை ஒழுக்கத்தை அங்கதச் சுவையுடன் கடிந்து பேசும் தோழி, தலைவியிடம் பேசும்போது மட்டும் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறுவழியில்லை என்று கூறுகிறாள்.

> *உனது கணவனின் பரத்தமை ஒழுக்கத்திற்காக நீ ஊடுதல் பொருந்துமோ? நீ அவனை ஏற்றுக் கொள்ளாமல் அடம்பிடித்தால் உன்னிடம் உள்ள திருமகள் நீங்கிவிடுவாள். நீ வறுமைவாய்ப்பட்டு வற்றி வரண்டு போக, உனது பால் வற்றிய மார்பைப் புதல்வர்கள் சுவைத்து ஏக்கம் கொள்வர். தலைவனின் பரத்தமை குறித்து மாறுபடுவர் அறிவில்லாதோரே*

எனக் கூறுகிறாள். பரத்தையர் கூற்றாக அமைந்த 9 பாடல்களில் 6 பாடல்களில் பாங்காயினார் இடத்திலும் 1 பாடலில் தலைவனின் பாங்கனிடத்திலும் மற்றொரு பாடலில் தலைவனிடத்திலும் எஞ்சிய ஒரு பாடலில் புலந்தும் கூறியிருப்பதைக் காண்கிறோம்.

மருதப் பாடல்களில் அமையும் பாத்திரங்களில் முதன்மை பெறுபவர் நால்வர். இவர்களில் தலைவன், தலைவி, தோழி ஆகிய மூவரும் பிற திணைகளுக்கும் உரியவர்களாயிருக்கப் பரத்தை மருதத்திணைக்கு உரிய சிறப்பு பாத்திரமாக இருத்தலைக் காண்கிறோம்,

பரத்தையின் கூற்றுகளிலிருந்து அவர்கள் பிற பெண்களின் கணவர்களிடம் தகாத உறவு வைத்திருந்ததைப் பற்றி வருத்தமோ வெட்கமோ படவில்லை எனக் காண்கிறோம். மாறாகத் தன்னையும் தலைவனையும் இணைத்துப் பழிதூற்றும் தலைவிக்கு எதிராக சூளுரைத்துள்ளமையை அறிகிறோம்.

> *எமது கூத்தைக் காணும் பொருட்டு தலைவன் தான் எமது சேரிக்கண் வந்தானேயன்றி நானாகத் தேடிச் செல்லவில்லை. அப்படியிருந்தும் தலைவி என்னைப் பழிதூற்றுகிறாளாம். ஆதீமந்தி வருந்தும்படியாக ஆட்டனத்தியைக் காவிரியாறு வெளவிக் கொண்டதைப்போல தலைவி வருந்தும்படியாகத் தலைவனை வெளவிக் கொள்ள எண்ணியுள்ளேன். அதன்பிறகு அவள் என்ன செய்வாளாம்?*

என்கிறாள் ஒரு பரத்தை.

> *மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்க*
> *தண்துறை ஊரன் எம்சேரி வந்தென*
> *. . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
> *கச்சினன் கழலினின் தேம்தார் மார்பினன்*
> *வகைஅமைப் பொலிந்த வனப்பு அமை தெரியல்*
> *கரியல்அம் பொருநனைக் காண்டீரோ என*
> *ஆதிமந்தி பேதுற்று இனைய*
> *சிறைபறைந்து உறைஇச் செங்குணக்கு ஒழுகும்*
> *அம்தண் காவிரிபோல*
> *கொண்டு கைவலித்த சூழ்ந்திசின் யானே* (அகம் 76)

மற்றொரு பரத்தை தன்னையும் தலைவனையும் இணைத்துப் பேசும் தலைவியின் வயிறு எரியும்படியாக அவள் வீட்டின் முன்னே உலாவி வருவோம் வா எனத் தனது தோழியை அழைக்கிறாள் (அகம். 106).

*'உன் கணவனை எனது கூந்தலால் கட்டி இழுத்து வந்துவிடுவேன்' என ஒரு பரத்தை தலைவியை எச்சரிக்கிறாள். அப்படித் தலைவனைக் கொண்டு வந்து சேர்க்காது போனால் 'இறந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள் போல' என் அழகெல்லாம் கெடுக (அகம். 266).*

எனச் சூளுரைக்கிறாள் பிறிதொரு பரத்தை.

'நின்னை ஒருஞான்றும் பிரியேன்' என்று தலைவியின் முன்கை பிடித்து தெய்வத்தின் முன் உறுதிச் சூள்செய்த தலைவன் பரத்தைக்கும் அவ்வாறே செய்தான் என்பதை அறிகின்றபோது மனைவிக்கு நிகராகப் பரத்தையும் தலைவனின் அகவாழ்வில் இடம்பெற்றிருந்தாள் என்பதை அறிய முடிகிறது.

**மேட்டுக்குடித்தனமும் பரத்தமையும்**

காலம் காலமாகவே உழைக்கும் எளிய மக்கள் ஒரு பிரிவாகவும், உழைப்பை அனுபவிக்கும் மேட்டுக்குடி மக்கள் ஒரு பிரிவாகவும் வாழ்ந்து வந்திருத்தலைச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காண்கிறோம். தொல்காப்பியரே உழைக்கும் எளிய மக்களைக் குலமக்களாகவும், மேட்டுக்குடி மக்களைத் தலை மக்களாகவும் கொண்டு சூத்திரம் படைத்திருப்பதை அறிவோம்.

ஏனைய திணைப்பாடல்களை விடவும் மருதத் திணைப் பாடல்களில் இந்த ஏற்றத்தாழ்வு அதிகமிருப்பதைக் காண்கிறோம். வயல்வேலைகளைச் செய்யும் உழைக்கும் மக்கள் ஒரு பிரிவாகவும், ஊரன், மகிழ்நன் என்று அழைக்கப்பட்ட வயலுக்கு உரிமைபூண்ட நில உடைமையாளர்கள் ஒரு பிரிவாகவும் வாழ்ந்து வந்துள்ளனர்.

அரசர்க்கும் செல்வந்தர்க்கும் படைத்தலைவர்களுக்கும் மணமாகிச் சென்ற பெண்கள் கர்ப்பமாக இருந்தபோதும், பிரசவமாகிக் குழந்தைக்குப் பாலூட்டிய போதும், மாதவிடாய் நாட்களிலும் அவர்களுடைய கணவர்கள் தேர்பூட்டிச் சென்று பரத்தையர் சேரிகளில் கொட்டமடித்தார்கள். இதை அந்த பெண்களால் தட்டிக் கேட்க முடியவில்லை. ஓரளவுக்குத்தான் அவனிடம் அவளால் சண்டை பிடிக்கமுடிந்தது. அவனைத் தடுக்க முடியவில்லை. "ஊர் சிரிக்கும், பழி தூற்றும்" என்று அவள் ஊரைக்காட்டி எச்சரித்தாலும்

அவனுக்கு ஊர் ஒரு பொருட்டாக இருந்ததில்லை. ஏனெனில் அவன் அவனைப் போன்ற செல்வமும், செல்வாக்கும் கொண்ட ஆண்களைப் போலவே வாழ்வதை இயல்பானதாகக் கருதியதால் பரத்தையிடம் போய் வருவதை ஒழுக்கக்கேடாக நினைத்ததில்லை.

பெண் கணவனைத் தனது சமையல் திறத்தாலும், பாலியல் சுகத்தாலும், அவனுக்குப் புதல்வனைப் பெற்றுத் தருவதாலும் நிறைவடையச் செய்பவளாகவே சித்தரிக்கப்பட்டாள். கணவன் பரத்தையிடம் போவதைத் தடுக்க இயலாத இவள், பரத்தையைப் பார்த்து,

> *"எம்மைப்போல செல்வந்தர் வீட்டுக்கு மணமாகிச் சென்று ஆண் குழந்தைகளைப் பெறுவதற்கு உன்னால் முடியுமா? ஒரு மகனுக்கு நீ தாயாக முடியுமா?"*

என்று எள்ளி நகையாடியதில் திருப்தி கண்டாள். பரத்தையைவிடத் தான் பெருமைக்குரியவள் என்று நினைத்தாள்.

> *. . . . . . . . . . . . . . எம்போல்*
> *புல்உளைக் குடுமிப் புதல்வற் பயந்து*
> *நெல்லுடை நெடுநகர் நின்இன்று உறைய*
> *என்ன கடத்தளோ மற்றே தன்முகந்து*
> *எழுதுஎழில் சிதைய அழுதனள் ஏங்கி* (அகம் 176)

உழைக்கும் பெண்கள் வீட்டோடு வாழ்ந்தாலும் வெளி வாழ்க்கை அவர்களுக்கு முற்றிலும் மறுக்கப்படவில்லை. வறுமையின் பிடியில் வாழ்ந்ததால் உணவு தேடுவதற்கு அவர்கள் வெளியில் சென்று உழைத்தே வாழவேண்டிய நிலையில் இருந்தனர். அரண்மனை கிளிகளாக வாழ்ந்த அரசிகள் பசி வறுமை அறியாத சுகபோகத்தில் வாழ்ந்தாலும் பல சேடிகள், வேலைக்காரிகள் வைத்து வேலை வாங்கினாலும் அப்படிப்பட்ட வாழ்க்கை நிச்சயமற்றதாகவும், கட்டுப்பாடு காவல் மிகுந்ததாகவும் இருந்தது. அரசியின் கணவனுக்கு அவள் மட்டுமே மனைவியாக இல்லை. வேறு பல உரிமை மகளிரும் அவனுடைய பாலியல் களியாட்டத்திற்குரியவர்களாக இருந்தார்கள் என்பது அவளுக்கு நன்கு தெரியும். இருந்தும் அதிகபட்சமாக ஊடுருவதைத் தவிர அவளால் எதுவும் செய்ய இயலாது. இன்றளவும்

உழைக்கும் மக்களை விடவும் வசதியானவர்களிடத்தே அதிக அளவு பரத்தமை ஒழுக்கம் இருப்பதை அறிகிறோம்.

**சான்றோர் பார்வையில் பரத்தமை**

சமுதாயத்தில் மேட்டுக்குடி மக்களிடத்தே பரத்தமை ஒழுக்கம் பரவலாகக் காணப்பட்டாலும் சான்றோர் இவ்வொழுக்கத்தை ஏற்றுக் கொள்ளவில்லை என்பது ஆறுதலுக்குரியது.

அகத்திணை இயலில் பிரிவு பற்றிய செய்திகளைப் பத்து நூற்பாக்களில் தொகுத்துத் தருகிறார் தொல்காப்பியர் (தொல். 971, 980). அவற்றில் ஓதல், பகை, தூது, வழிபாடு, நாடுகாவல், பொருள் என்னும் ஆறின் காரணமாகப் பிரிவுகளை மட்டுமே முதன்மையாக குறிப்பிடுகிறார். பரத்தையின் பிரிவை முதன்மைப்படுத்தவில்லை.

பரத்தமை என்பது சமுதாயக் கட்டமைப்புக்குரிய ஒழுக்கங்களைப் பேணாத போக்கினது என்பதால் அதனைப்

*பேணா ஒழுக்கம்* (தொல். 1096: 14)

எனக் கடிகிறார் தொல்காப்பியர். மனக்கட்டுப்பாட்டில் அடங்காத ஒழுக்கம் என்னும் போக்கில் அதனை,

*அடங்கா ஒழுக்கம்* (தொல். 1096: 6)

என்கிறார். நம்பி நாடி வந்த தலைமகளுக்கும், ஈன்றெடுத்த மக்களுக்கும், கொடுமை செய்வதாக அமைவதால் பரத்தமை ஒழுக்கத்தைக்

*கொடுமை ஒழுக்கம்* (தொல். 1093: 28, 38)

எனக் கடிந்துரைக்கிறார்.

பரத்தமையைப் பொதுவாகச் சாடும் தொல்காப்பியர், பரத்தமையை மேற்கொள்ளும் தலைமகனையும் சாடுகிறார்.

*தங்கிய ஒழுக்கத்து கிழவன் (தொல். 1093. 15)*

*பிழைத்து வந்திருந்த கிழவன் (தொல். 1095: 8)*

என்பன அவரின் சாடலின் வெளிப்பாடு.

வள்ளல் பேகன் நல்லூர்ப் பரத்தையை நாடித் தன் மனைவி கண்ணகியைத் துறந்தபோது கபிலர், பரணர், அரிசில்கிழார்,

பெருங்குன்றூர் கிழார் போன்ற சான்றோர்கள் தலையிட்டுப் பேகனின் கூடாஒழுக்கத்தை இடித்துரைத்தனர் என்பதையும் அறிகிறோம்.

உலகம் முழுவதும் பரவியிருந்த இந்த பரத்தமைக்குப் போர்ச் சமூக அமைப்பும், ஒருதார மணமுறையும் காரணங்களாகச் சமூகவியல் அறிஞர்களால் கொள்ளப்படுகின்றன. இருந்த போதிலும் காதலை வற்புறுத்தும் தமிழ்ச் சமூக அமைப்பில், திருமணத்திற்கு முற்பட்ட ஆண், பெண் சந்திப்பில் சுதந்திரத்தை அனுமதித்த ஒரு சமுதாயத்தில் பரத்தமை ஏற்பட்டதற்கான காரணம், உண்டுகொழுத்த ஆண்களின் அளவிலாப் போக நுகர்ச்சிதான் என்பதை அறிய முடிகிறது.

# மருதமும் வரலாற்றுப் பதிவுகளும்

மருதப் பாடல்களில் முடியுடை மூவேந்தர்கள், குறுநிலனாண்ட மன்னர்கள் போன்ற அரசர்களைப் பற்றியும், வந்து குடியேறிய கோசர்கள், யவணர்கள் பற்றியும், ஆட்டனத்தி போன்ற கலைஞர்களைப் பற்றியும் வரலாற்றுப் பதிவுகள் காணப்படுகின்றன. பொதுவாக பரத்தையரிடன் சென்று திரும்பிய தலைவனுக்கு வாயில் மறுத்த தோழியின் கூற்றாகவே வரலாற்றுச் செய்தியை அறியமுடிகிறது. சிலவிடங்களில் பரத்தையர் கூற்றிலும் இப்பதிவைக் காணலாம்.

## பாண்டியன் நெடுஞ்செழியன்

மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிசெய்த பாண்டிய மன்னர்களுள் தலையாயவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். இவனது வீரத்தை வியக்கும் ஒரு வரலாற்றுப் பதிவு இங்கு காணப்படுகிறது.

முடியுடை வேந்தர்களான சேரன், சோழன் குறுநில மன்னர்களான திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மாண், பொருநன் ஆகிய எழுவரும் தனக்கு எதிராகப் படைதிரட்டி வர, தலையாலங்கானம் என்ற இடத்திலே அவர்களை எதிர்கொண்டு சமராடி அவர்கள் கொண்டுவந்த படைக்கருவிகளைக் கைப்பற்றிக் கொண்டான் பாண்டியன் நெடுஞ்செழியன். படைக்கருவிகளைப் பறி கொடுத்த வீரர்கள் பாண்டியனின் வீரத்திற்கு எதிர்நிற்க இயலாமல் அலறிப் புடைத்து ஓடினார்கள். அப்போது அவ்விடத்திலே எழுந்த ஆரவாரத்தை விடவும் நீ பரத்தையொடு சேர்ந்து புனலாடியபோது எழுந்த ஆரவாரம் மிகுதியாக இருந்தது எனக்கூறி பரத்தையிட மிருந்து மீண்டுவந்த தலைவனுக்கு வாயில் மறுத்தாள் தோழி.

*கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்*
*ஆலங்கானத்து அகன்தலை சிவப்ப*
*சேரல், செம்பியன், சினம்கெழு திதியன்,*
*போர்வல் யானைப் பொலம்பூண் எழினி*
*நார் அரி நறவின் எருமை யூரன்,*
*தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்*

*இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன் என்று*
*எழுவர் நல்வலம் அடங்க ஒருபகல்*
*முரைசொடு வெண்குடை அகப்படுத்த உரைசெல*
*கொன்று களம்வேட்ட ஞான்றை*
*வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே* (அகம். 36)

என தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரத்தை மதுரைப்புலவர் நக்கீரர் பதிவு செய்துள்ளார்.

இதேபோல் கூடற்பறந்தலை எனுமிடத்தில் நடந்த போர்க்களத்திலும் சேரசோழ வேந்தர்களின் கடற்போன்ற பெரும் படைகளைத் தாக்கி, அவர்களின் முரசுகளை ஒழிந்து புறங்கொடுத்து ஓடச்செய்தான் இதே நெடுஞ்செழியன். இப்போரில் எழுந்த வெற்றி ஆரவாரத்தைவிட அலர் ஆரவாரம் பெரிது என்று உவமைக் கூறுவதன் வாயிலாக பரணர் இப்பாண்டிய வேந்தனின் ஆற்றலைப் போற்றிப் பாடியுள்ளார்.

*. . . . . . . மலர்தார்*
*மைஅணி யானை மறப்போர்ச் செழியன்*
*பொய்யா விழவின் கூடற் பறந்தலை*
*உடன் இயைந்து எழுந்த இருபெருவேந்தர்*
*கடல் மருள் பெரும்படை கலங்கத் தாக்கி* (அகம். 116)

அழித்ததாக பரணர் பதிவு செய்துள்ளார். மேலும் இப்பாண்டியன் அரிமண வாயில் உறத்தூரில் நீடுர்க் கிழவோன் ஆகிய வேள்எவ்வியின் படைவீரரைச் சாய்த்து உண்டாட்டு அளர்ந்தான் (அகம். 266) என்பதையும் அறிகிறோம்.

**சோழன் கரிகாலன்**

சோழப் பேரரசர்களுள் முதன்மையானவன் கரிகாலன் என்பதை நாம் அறிவோம். மலைகளே காணப்படாத தஞ்சை மாவட்டத்தில் கற்களைக் கொண்டே காவிரியின் குறுக்கே அவன் காலத்தில் – அவனது ஆணையின்படி கட்டப்பட்ட கல்லணை நம் முன்னோரின் தொழில்நுட்பத் திறனை என்றென்றும் பறைசாற்றிக் கொண்டிருக்கும் ஓர் வரலாற்றுச் சிறப்பு.

அக்கரிகாலன் வெண்ணிவாயில் என்னுமிடத்தில் தன்னோடு பொருதிய சேரன், பாண்டியன் ஆகிய முடியுடை வேந்தர்களையும், பதினொரு வேளிரையும் தோற்றோடச் செய்தான் என்ற செய்தி அகநானூற்று மருதப்பாடலில் காணப்படுகின்றது.

*காய்சின மொய்ம்பின் பெரும் பெயர்க் கரிகால்*
*ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்,*
*சீர் கெழு மன்னர் மறலிய ஞாட்பின்*
*இமிழ் இசை முரசம் பொரு களத்து ஒழிய,*
*பதினொரு வேளிரொடு வேந்தர் சாய,*
*மொய் வலி அறுத்து ஞான்று* (அகம். 246)

இவன் வெண்ணிப் பரந்தலையில் நிகழ்த்திய போர் புலவர்களின் பாராட்டினைப் பெற்றது. இப்போரில் தோல்வியுள்ள பெருஞ்சேரலாதன் தனக்குற்றப் புறப்புண்ணினை எண்ணி நாணமுற்று வாளொடு வடக்கிருந்தான். அச்சேரவேந்தனிடம் அன்புற்ற சான்றோர் தாமும் அவனுடன் பெறலரும் விண்ணகத்துக்கு ஒருங்குசெல்ல வடக்கிருந்தனர் என்பது மாமூலர் குறித்துள்ள வரலாற்றுச் செய்தி.

*கரிகால்வளவனொடு வெண்ணிப்பறந்தலைப்*
*பொருதுபுண் நாணிய சேரலாதன்*
*அழிகலி மருங்கின் வாள்வடக் கிருந்தென*
*இன்னா இன்னுறை கேட்ட சான்றோர்*
*அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர்* (அகம். 55)

வாகைப் பறந்தலை என்னும் போர்க்களத்தில் கரிகாலன் பெரும்படையுடன் பகைமன்னர் ஒன்பதின்மரையும் தாக்கிப் பொழுது, அவர்கள் தத்தம் வெண்கொற்றக் குடைகளைக் களத்தில் போட்டுவிட்டு ஓடும்படி விரட்டியடித்த செயலைப் பரணர் பொறித்துள்ளார் (அகம். 125).

## சேரன் செங்குட்டுவன்

சேரநாட்டை ஆண்ட மன்னர்களில் சிறப்பிடம் பெற்றவன் சேரன் செங்குட்டுவன். இவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின்

மைந்தன்; தமிழின் முதல் காப்பியமாம் சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகளின் தமையன்.

ஆரிய மன்னர்கள் அலறுமாறு தாக்கிய சேரன் செங்குட்டுவன் இமயத்தின் மீது விற்கொடியைப் பதித்து அவ்வாரிய வேந்தர்களைப் பிணிந்து வந்த செய்தி இங்கு பதிவாகியுள்ளது.

*ஆரியர் அலறத் தாக்கி, பேர் இசைத்*
*தொன்று முதர் வடவரை வணங்கு வில் பொறித்து*
*வெஞ் சின வேந்தரைப் பிணித்தோன்* (அகம். 396)

ஆரியர், வடவர் என குறிக்கப்படுவது கனகர், விஜயர் என்ற இரு ஆரிய மன்னர்களைத்தான் என்பதையும், அவர்கள் தமிழரையும், தமிழரின் பண்பாட்டையும் இழித்தும், பழித்தும் பேசியதால் செங்குட்டுவன் அவர்களைப் பிணித்து அவர்கள் தலையிலே இமயத்தின் கல்லேற்றிக் கொண்டுவந்து சேரநாட்டில் கண்ணகிக்குக் கோயில் எழுப்பித்தான் என்பதையும் பின்னர் வந்த வரலாற்று ஆசிரியர்கள் பதிவு செய்துள்ளதை நாம் அறிவோம்.

**கோசரும், யவணரும்**

கோசரும், யவணரும் தமிழ்நிலத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர்கள் அல்ல. இவர்கள் பிற தேசங்களிலிருந்து இங்கு வந்து குடியேறியவர்கள். இவர்கள் இங்குள்ளோரோடு இயைந்தும் முரண்பட்டும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.

பயிற்றில் பசு புகுந்து மேய்ந்த சிறு பிழைக்காக கோசர் என்பார் தன் தந்தையை அருளின்றிக் கண்களைத்தமையால் அன்னிமிஞிலி என்பாள் சினம் கொண்டு குறும்பியன், திதியன் என்பவர்களால் அக்கோசரைக் கொல்வித்து மாறுபாடு தீர்ந்து களிப்புற்றாள் என்பது பற்றிய குறிப்பு அகம் 196ஆம் பாடலில் காணப்படுகிறது. அகம் 216ஆம் பாடலில் கோசர், யவணர் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது.

**நாண்மகிழ் இருக்கை**

வள்ளல் தன்மையுடைய வீரன் ஒருவனின் வீரத்தையும், ஈரத்தையும் புகழ்ந்து பாடி, பொன்னும் பரிசிலும் பெற்றுச் செல்வர்.

பாணரும் பொருநரும் என்பதைப் பண்டைய இலக்கியங்கள் வாயிலாக நாம் அறிவோம். அப்படி பொருநரும் பாணரும் தன்னைப் பற்றிப் பலவாறு புகழ்ந்து பாட, அதைச் செவிமடுத்து ரசித்தபடி அவ்வரசன் அமர்ந்திருக்கும் இடத்திற்குப் பெயர் நாண்மகிழ் இருக்கை. இது நாலோலக்கம் எனவும் அழைக்கப்படுகிறது. இரண்டு மருதப் பாடல்களில் இதைப் பற்றிய செய்தி காணப்படுகிறது.

கட்டி என்பான் பாணன் என்பானோடு கூடி தித்தன் வெளியன் என்பவனை எதிர்த்துப் போர்புரிய உறையூர் நோக்கி வந்தான். அப்போது உறையூரின் கண்ணுள்ள நாலோலக்கத்தின் கண்ணே எழுந்த இனிய இசையினது ஒலியைக் கேட்டு அவனது பெருமையை உணர்ந்து அஞ்சி போர் செய்யாது ஓடிப்போன செய்தி (அகம் 226) இங்குக் காணப்படுகிறது.

அஃதை என்பான் யானைகளையும், நல்ல அணிகலன் களையும் பரிசிலர்க்கு வழங்கி மகிழ்ந்த செய்தி பிறிதொரு பாடலில் (அகம். 76) பதிவு செய்யப்பட்டுள்ளது.

*இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு*
*நன்கலன் ஈயும் நான்மகிழ் இருக்கை*
*அவைபுகு பொருநர் பறையின் ஆனாது*
*கழறுப என்ப* (அகம். 76)

என்பது அப்பாடல்.

## கள்ளுடைப் பெருஞ்சோறு

போர்க்களத்தில் ஈடுபடும் தம் படைவீரர்களுக்கு கள்ளும், சோறும் கலந்த பெருவிருந்து அளித்து அவர்களை உற்சாகப்படுத்தும் முறைமை அன்றைய தமிழ் அரசர்களிடமும், குறுநில மன்னர்களிடமும் இருந்திருக்க வேண்டும்.

*யாழ் இசை மறுகின் நீடுர் கிழவோன்*
*வாய் வாள் எவ்வி ஏவல் மேவார்*
*நெடு மிடல் சாய்த்த பசும் பூண் பொருந்தலர்*
*அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்,*
*கள்ளுடைப் பெருஞ்சோற்று எல் இமிழ் அன்ன* (அகம். 266)

கள்ளும், கறி விருந்தும் உண்பதால் ஏற்படும் மகிழ்ச்சி ஆரவாரம் பெரிதாக இருந்தது என்பதைப் பரணர் பதிவு செய்கின்றார்.

**கலைஞர்களின் வாழ்நிலை**

மனிதர்கள் சமூகமாக வாழத் தலைப்பட்ட பின்னர் மக்கட் சமூகத்தை மகிழ்விக்கவும், தமது தனித்திறனை வெளிப்படுத்தவும் மக்கட் சமூகத்திலிருந்தே வெளிப்பட்டவர்கள்தான் கலைஞர்கள். தன்னுடைய இசையாலும், பாட்டாலும், நடிப்பாலும் தன் தனித்திறனை வெளிப்படுத்திப் பரிசுகளும், பாராட்டுகளும் பெற்றனர். கண்டு ரசித்தவர்களின் பாராட்டுக்கள் தான் அவர்கள் பெற்ற – பெற விரும்பிய – மிகப் பெரிய வெகுமதி. அவர்களின் வாழ்க்கை வறுமையோடும், இடப்பெயர்வோடும்தான் இருந்தது.

மருதப்பாடல்களில் காட்டப்படும் பரத்தையர் பெரும்பாலும் கலைஞர்களாகவே இருந்து வந்திருப்பதைக் காண்கிறோம். தலைவியாலும், தோழியாலும் இழித்தும், பழித்தும் பேசப்படுவதைக் காணும்போது தமிழ்ச் சமூகத்தில் பரத்தைப் பெண்டிர் தாழ்நிலையிலேயே வைக்கப்பட்டிருந்ததை அறிகிறோம். காதற்பரத்தை, நயப்புப் பரத்தை, சேரிப்பரத்தை என்றெல்லாம் இவர்கள் பல வகையினராக அழைக்கப்பட்டனர்.

*மண் கனை முழவொடு மகிழ் மிகத் தூங்க,*
*தண் துறை ஊரன் எம் சேரி வந்தென* (அகம். 76)

என பரத்தை கூறுவதை நோக்கும்போது சுடுமண்ணால் செய்யப்பட்ட மத்தளம் (குடம்) அடித்து ஆடிப்பாடி மகிழ்வதைக் காணவும், சேர்ந்து ஆடவும் தண்துறை ஊரனாகிய தலைவன் பரத்தையர் வாழும் சேரிக்கு வந்ததை அறிகிறோம்.

*ஒண் தொடி மகளிர் பண்டை யாழ்பாட*
*ஈர்ந் தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப* (அகம். 136)

என்ற பாடல் வழியாக பரத்தையர் யாழ் வாசிக்கவும், குச்சியால் முழவு இசைக்கவும் அறிந்திருந்தனர் என்பதை அறிகிறோம். பரத்தையர் சேரியிலிருந்து காற்றில் மிதந்து வரும் யாழிசையும், முழவோசையும் அங்கு தலைவன் பரத்தையொடு மகிழ்ந்தபடி இருந்து கொண்டிருக்கிறான் என்பதை யாவருக்கும் புலப்படுத்துவதாய் இருந்தது.

*. . . . . ஏந்து எழில் மழைக் கண்*
*நோக்குதொறும் நோக்கு தொறும் தவிர்விலையாகி,*
*காமம் கைம்மிகச் சிறத்தலின், நாண் இழந்து*
*ஆடினை. . . .* (அகம். 266)

என பரத்தையரிடம் சென்று வந்த தலைவனைத் தலைவி கடிந்துரைப்பதைக் காண்கிறோம்.

நேற்றைய தினம் பரத்தையோடு சேர்ந்து புனலாடி மகிழ்ந்து திரிந்துவிட்டு இன்று வந்து தன் மனைவியிடம், "மாசில் கற்பின் புதல்வன் தாய்" என மாயப் பொய்ம்மொழி சாற்றி தன் முதுமையை எள்ளிய தலைவனின் செயலைக் கடிந்துரைக்கிறாள் (அகம். 6) மற்றொரு தலைவி.

**தலைவியின் சமரசம்**

என்னதான் இழித்தும் பழித்தும் பேசினாலும் பரத்தை ஒருத்தி தன் செயலால் தலைவியின் உள்ளத்தில் இடம்பிடித்தாள். வேறு வழியின்றி அவளைத் தனக்கு இணையாளாக ஏற்றுக்கொண்டாள் ஒரு தலைவி. பரத்தைக்கு ஒரே பாராட்டு மழைதான்.

தெருவில் சிறுதேர் ஓட்டி விளையாடிக் கொண்டிருந்ததன் ஆசை மகனை – அவன் தனியனாய் நிற்கும் நேரம் பார்த்து 'என் உயிரே! வருக!' எனத் தூக்கித் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள் பரத்தை. காரணம் அவன் ஒப்பீட்டளவில் தன் களவுக் காதலன் (தலைவன்) போலவே இருந்தான் என்பதால். இதைத் தூரத்தே நின்று கண்ணுற்ற தலைவி – தலைவனின் மனைவி – துணுக்குறவில்லை. கோபம் கொள்ளவில்லை. மாறாக பரத்தையை ஆரத் தழுவியபடி அவள் பேசுகிறாள். 'குற்றமற்ற இளைய மகளே! ஏன் மயங்கினை? இவனுக்கு நீயும் ஒரு தாயில்லையோ?' என்று.

அத்துடன் நின்றாளா? அதுதான் இல்லை. 'வானத்தில் அரிய தெய்வமாகிய அருந்ததி போன்றவளாகிய அவள் நின் மகனுக்குத் தாயாதல் ஒக்கும் என எண்ணி யானும் அவளை விரும்பினேன்' எனத் தன் கணவனிடம் கூறினாள்.

இந்த நிகழ்வு எதைக் காட்டுகிறது? பண்டைத் தமிழ்ப் பெண்கள் தலைவி கூடலாம்; ஊடலாம்; தலைவனின் செய்கைக்காக வருந்தலாம். மென்மையாகக் கண்டிக்கவும் செய்யலாம். ஆனாலும் தலைவன் விடாப்பிடியாகப் பரத்தையை நாடிச் சென்றால் அதை

அப்படியே ஏற்றுக்கொண்டு சமரசமாகி விடுவதைத் தவிர வேறு வழியில்லை என்பதைத்தான் காட்டுகிறது.

*மாசு இல் குறுமகள்! எவன் பேதுற்றனை?*
*நீயும் தாயை இவற்கு* (அகம். 16)

என தலைவி கூறுவது மகிழ்ச்சியாலா? வருத்தத்தாலா? என்பதை தொடர்ந்து ஆய்வுக்குட்படுத்த வேண்டிய அவசியம் உள்ளது.

**தந்தையும் மகளும்**

தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் போன்ற பாத்திரப்படைப்புகளையே அக இலக்கியங்களில் பார்த்து வந்த நமக்கு மருத அகப்பாடலில் ஒரு வித்தியாசமான காட்சி.

தூண்டில் கோலால் மீன்பிடித்து வாழும் பாணரது மகள் ஒருத்தி, தான் பிடித்த வரால்மீனை பன்னாடையால் அரிக்கப்பட்ட கள்ளை உண்டு களித்திருந்த தன் தந்தைக்கு, வஞ்சி மரத்தின் விறகினால் சுட்டு வாயில் இட்டு உண்பிக்கும் ஓர் அரிய காட்சியைக் கண்டு மகிழ்கிறோம்.

*நாண் கொள் நுண்கோலின் மீன் கொள் பாண் மகள்—*
*தான் புனல் அடைகரைப் படுத்த வரா அல்,*
*நார் அரி நறவு உண்டு இருந்த தந்தைக்கு,*
*வஞ்சி விறகின் சுட்டு, வாய் உறுக்கும்*
*தண்துறை ஊர்* *(அகம். 216)*

இக்காட்சி உழைத்துச் சோர்ந்த மக்களின் வாழ்நிலையைப் படம்பிடித்துக் காட்டும் ஓர் உன்னதக் காட்சி என்பது மிகையாமோ?

**உள்ளுறை உவமச் சிறப்பு**

எல்லா அக இலக்கியங்களையும் போன்று அகநானூற்றிலும் தோழி கூற்றே மிகுதி. இங்கு தோழி கூற்றாக அள்ளூர் நன்முல்லையார் உள்ளுறை அமைத்துப் பாடியுள்ளார். உள்ளுறை என்பது உவமத்தின் ஒரு வகை. வெளிப்படையாக ஒன்றைக் கூறி மற்றொரு கருத்தை அவ்வுவமையில் வைத்துக் கூறுவது, இதனையே உள்ளுறை உவமம் என்கிறோம்.

தலைவன் தன் மனைவியாகிய தலைவியைச் சந்திக்க விரும்புகிறான். தலைவி அவனது பரத்தமைச் செயல்களால் அவனைச்

சந்திக்க விரும்பவில்லை. தலைவன் தோழியை நாடுகிறான். தோழியிடம் பேசுகிறான். தோழி அவனுடைய செயல்களை மிக அமைதியாகக் கூறி அவன் எண்ணத்தை மறுக்கிறாள்.

நம் ஊரில் உள்ள எருமைமாடு, தான் கட்டப்பட்டிருந்த தொழுவை தான் பெய்த சிறுநீராலும், சாணத்தாலும் சேறாக்கித் தான் அங்கு நிற்க விரும்பாமல் இரவில் தன் கழுத்தில் கட்டியிருந்த கயிற்றை அறுத்துக்கொண்டு, அருகிலுள்ள வயலின் வேலியைத் தன் கொம்பால் நீக்கி வயலுக்குள் செல்கிறது. வயலிலுள்ள மீன்கள் எருமையைக் கண்டு பல இடங்களுக்கும் பாய்ந்து ஓடுகின்றன. வயலிலுள்ள வல்லைக் கொடியை மயக்கி அறுத்து எரிகிறது. வயலிலுள்ள வண்டு உள்ளே இருக்கிற தாமரை மலரை விரும்பி உண்ணுகிறது. மாலைக் காலத்தில் தாமரை மலர் கூம்பியிருக்கும்; விரிந்து இருக்காது. அதனுள் ஏற்கனவே தேனை உண்ணச் சென்ற வண்டு இருக்கிறது. அதனையும் அறியாமல் எருமை தாமரை மலரை உண்ண விழைகிறது.

நாம் அந்த எருமையை என்ன செய்ய முடியும்? நீ மற்றொரு பெண்ணை நம் வீட்டிற்கு அழைத்து வந்து மணந்து கொண்டதாக ஊரார் பேசுகிறார்கள். எங்களுக்கு அது தெரியாது.

பாண்டிய நாட்டில் அள்ளூர் என்ற ஊர் வளமுடையது. அவ்வாறு வளமுடையவள் எங்கள் தலைவி அவள் உள்ளம் வருந்த நீ செயல்படுகிறாய். யார் உன்னைத் தடுக்க முடியும்? 'நீ சென்று வருக' என தலைவனிடம் தோழி கூறுகிறாள்.

*பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்*
*ஒண்நொடி நெகிழினும் நெகிழ்க*
*சென்றீ பெரும! நின் தகைக்குநர் யாரோ?* (அகம். 46)

இங்கு எருமைமாடு – தலைவன்; கழுத்தில் கட்டப்பட்டிருந்த கயிறு – நாணம், வெட்கம். வயல் – பரத்தை இருக்கின்ற வீடு; வேலி – பாணன்; வயல் மீன்கள் – பரத்தையின் தோழியர்; வள்ளைக் கொடி – நற்றாய், தாமரை மலர் – பரத்தை வண்டு – மற்றொருவன்.

## தோழியின் அறிவார்ந்த நிலை

தோழி என்பவள் சாதாரணப் பெண்ணல்ல. அவள் தலைவனுக்கும், தலைவிக்குமிடையே ஓர் உறவுப்பாலம். தவறு கண்ட

விடத்து இடித்துரைத்து அறிவுரை பகரும் ஆசான். அந்த நிலையையே இங்கு காண்கிறோம்.

அறனல்லவற்றை என்றும் விரும்பா உள்ளம் ஒரேவழி மயங்கி விரும்புமாயின், கேட்ட கேள்விகள் அங்குசமாக உள்ள மாய யானையை மீட்டு, இல்லறமும், பொருளறமும் வழுவா வகையை ஆராய்ந்து, தனது தகுதியுடைமையை உணர்ந்து அதன் பின்னரே தான் கருதியதை முடித்தல் உளதாகும். பெரியோரின் ஒழுக்கங்கள் அத்தன்மையவாம்.

செய்யும் பெரியோர் செயல்களை ஆராயுமிடத்து நும்மையொத்த பெரியோரிடத்தும் இத்தகைய பொய்யொடு கூடிய கூற்றுக்கள் தோன்றின் இவ்வுலகின்கண் மெய் எங்கு உளதாகும்? எனத் தலைவனின் பரத்தமையை – அவனது அறனில் வாழ்க்கையை அறிவுறுத்தல் மூலமாக மென்மையாகக் கடிந்துரைக்கிறாள் தோழி.

*விழையா உள்ளம் விழையும் ஆயினும்*
*என்றும் கேட்டவை நோட்டியாக மீட்டாங்கு*
*அறனும் பொருளும் வழாமை நாடி*
*தற்தகவு உடைமை நோக்கி மற்றுஅதன்*
*பின்ஆகும்மே முன்னியது முடித்தல்*
*அனைய பெரியோர் ஒழுக்கம்* (அகம் 286)

தலைவியின் வருத்தத்தைப் பொருட்படுத்தாது தொடர்ந்து தலைவன் பரத்தையை நாடிச் சென்றால் குடும்பத்தின் நிலை என்னாகும்? என்பதை மற்றோரிடத்தில் பதிவு செய்கிறாள் தோழி.

*செய்யோள் நீங்க, சில பதம் கொழித்து,*
*தாம் அட்டு உண்டு, தமியர் ஆகி*
*தே மொழிப் புதல்வர் திரங்கு முலை சுவைப்ப,*
*வைகுநர் ஆகுதல்* (அகம். 316)

என்பதன் மூலம் தலைவியானவள் தம்மிடமிருந்து திருமகள் நீங்க சிறிய அரிசியைப் புடைத்து தாமே சமைத்துத் தாமே உண்டு தனித்தோளாகி தேன்போலும் இனியமொழ பேசும் தன் குழந்தைகள் பால் இன்றி வற்றிய முலையினைச் சுவைத்துப் பார்க்கத் தயங்குவர்.

இதுபோன்ற அவலநிலை குடும்ப தலைவிக்கு ஏற்படும் என எச்சரிக்கிறாள் தோழி.

**ஆடற்கலைகள் ஆட்டனத்தி**

ஆட்டனத்தி ஒரு மிகச் சிறந்த ஆடற்கலைஞன். கச்சினன், கழலினன், தேம்தார் மார்பினன், தனது வனப்பமைந்த தோள் வலியாலும், உடல் பலத்தாலும் சுற்றிச் சுழன்றாடும் அழகிய பொருநன். அவனது ஆட்டத்திலே நெஞ்சைப் பறிகொடுத்தாள், கரிகாலன் பெற்றெடுத்த காரிகை ஆதிமந்தி. தமிழ் இலக்கிய வரலாற்றில் மிகச் சிறந்த இணையராக அறியப்பட்டனர் ஆட்டனத்தியும் ஆதிமந்தியும்.

கரிகால் பெருவளத்தானோடு சுற்றங்கள் கூடி காவிரி யாற்றங்கரையிலே மகிழ்ந்திருக்க பெருக்கெடுத்து கீழ்த்திசை நோக்கி ஓடும் காவிரி நீரில் சீறிப் பாய்ந்து நீராடிய ஆட்டனத்தியைக் காவிரி நீர்ச்சுழல் இழுத்துச் சென்றுவிட்டது.

*'ஆட்டன் அத்தியைக் காணீரோ?' என*
*நாட்டின் நாட்டின், ஊரின் ஊரின்*
*'கடல் கொண்டன்று' என, 'புனல் ஒளித்தன்று' என,*
*கலுழ்த்த கண்ணள், காதலற் கெடுத்த*
*ஆதிமந்தி.....* (அகம். 236)

காவிரி கரையோரம் புலம்பித் திரிந்த அவலத்தை இன்னும் சில பாடல்களின் (அகம். 76, அகம் 396) வழியாக அறிகிறோம்.

*கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்*
*தண்பதம் கொண்டு தவிர்ந்த இன்னிசை*
*ஒன்பொறிப் புனைகழல் சேவடி புரள*
*கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று*
*இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்பப்*
*புனல் நயந்து ஆடும் அத்தி அணிநயந்து*
*காவிரி கொண்டு ஒளிந்தாங்கு* (அகம் 376)

*. . . . . . . . . . . . . . . . . . மந்தி*
*பணிவார் கண்ணள் பலபுலந்து உறைய*
*அடுந்திறல் ஆற்றி ஆடு அணி நசைஇ*
*நெடுநீர்ககாவிரி கொண்டொலித்தாங்கு* (அகம் 396)

## பரத்தையின் சூளுரையும் வஞ்சினமுரைத்தலும்

'நான் இன்னது செய்து முடிப்பேன்' என உறுதியாக உரைப்பதை சூளுரை எனவும் இன்னது செய்து முடிப்பேன், செய்யேனாயின் இதுவாக ஆவேன்' என உரைப்பதை வஞ்சினம் எனவும் வகுக்கலாம். பரத்தை சூளுரைப்பதையும், வஞ்சினம் உரைப்பதையும் மருதப் பாடல்களில் காணலாம்.

## சூளுரைத்தல்

தன்னோடு தலைவனை இணைத்துப் பேசிய தலைவியின் வயிறு அலைக்கும்படி நாம் அவள் பார்க்கும்படி கைவீசி நடந்து வருவோம் வா' என தன் தோழியை துணைக்கு அழைக்கிறாள் பரத்தை.

*ஒளிறு வாள் தானைக் கொற்றச் செழியன்*
*வெளிறு இல் கற்பின் மண்டு அமர் அடுதொறும்*
*களிறு பெறு வல்சிப் பாணன் எறியும்*
*தண்ணுமைக் கண்ணிக் அலைஇயர், தன் வயிறே*

(அகம். 106)

'பாணன் அடிக்கும் தண்ணுமைக் கருவியின் (மத்தளம்) கண்போல தலைவியின் வயிற்றை அலைக்கும்படி' எனக் கூறிய உவமை நினைந்து நினைந்து நயம் கொள்ளத்தக்கது.

ஆதிமந்தி என்பாள் ஆடற்றிறன் மிக்க தன் காதலன் ஆட்டனத்தி நீரில் புகுந்து ஆடும் அழகினைக் கண்டு களித்திருக்க, காவிரியாறு வௌவிக் கொண்டு மறைத்தாற்போல நானும் தலைவி வருந்துமாறு நின்னைப் பற்றிக் கோடலும் அஞ்சா நிற்பேன் என் காதற்பரத்தை ஒருத்தி தலைவனிடம் சூளுரைக்கிறாள்.

*ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்ப நின்*
*மார்புறு கல்லாய் பிறன் ஆயினையே*
*இனியான் விடுக்குவென் அல்லென் மந்தி*
*பணிவார் கண்ணள் பலபுலந்து உறையக்*
*அடுந்திறல் அத்தி ஆடு அணி நசைஇ*
*நெடுநீர்க் காவி கொண்டொளித்தாங்கு நின்*
*மனையோள் வவ்வலும் அஞ்சுவல்* (அகம். 396)

**வஞ்சினமுறைத்தல்**

தனது ஊரைவிட்டு எம் சேரிக்கண் பொருந்திய தலைவனை, செவ்வரி பொருந்திய மையுண்ட கண்களையுடைய அவன் பெண்டிர் காணும்படியாக அவனது தார்மாலையையும் ஆடையையும் பிடித்துக் கொண்டு ஆரியர் பழக்கி வைத்துள்ள பெண்யானை தான் பழக்கிக் கொணர்ந்து தரும் பெரிய ஆண் யானை போல, அவனது தோளை எம் கூந்தலால் கட்டி அவர் மார்பினைச் சிறை செய்வேன். அப்படி செய்யேனாயின் என்தாய் பாதுகாத்து வளர்த்த என் அழகானது பொருளை விரும்பி இறந்தவர்க்கு ஈயாது சேர்த்து வைத்தவன் பொருள் போல வெளிப்பட்டுப் பரவாததாகி வருந்தி ஒழுவதாகுக' என பரத்தை ஒருத்தி வஞ்சினமுறைப்பதாகப் பரணர் பாடுகிறார்.

*வருகதில் அம்ம, எம் சேரி சேர!*
*அரி வேய் உண்கண் அவன் பெண்டிர் காண,*
*தாரும் தானையும் பற்றி, ஆரியர்*
*பிடி பயின்று தரூஉம் பெருங் களிறு போல*
*தோள் கந்தாகக் கூந்தலில் பிணித்து, அவன்*
*மார்பு கடி கொள்ளேன் ஆயின், ஆர்வுற்று*
*இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல,*
*பரந்து வெளிப்படாது ஆகி,*
*வருந்துகதில்ல, யாய் ஓம்பிய நலனே!* *(அகம். 276)*

இப்பாடலில் பயின்று வந்துள்ள இரண்டு உவமைகளும் எண்ணி எண்ணி மனங்கொள்ளத்தக்கன.

'ஆரியர் பிடிபயின்று தரும் பெருங்களிறு போல' எனவரும் உவமையில் ஆரியர்கள் ஆண்யானையைப் பிடிப்பதற்கு பெண் யானையை எப்படி எல்லாம் பயிற்சி தந்து பழக்கி வைத்திருந்தனர் என்பதை அறிந்து வியப்பை எய்துகிறோம்.

அதுபோல பரத்தையானவள் தனது இளமை அழகினை முதலீடாகக் கொண்டு வஞ்சினமுரைக்கிறாள்.

நிரம்பப் பொருளை உடைய ஒருவன் தன்னை நாடி வந்து இரப்போர்க்கு ஈயவில்லை என்றால் அப்பொருள் பரந்து வெளிப்படாமல் ஓரிடத்திலேயே குவிந்து இறுதியில் மண்ணோடு மண்ணாகிப் போகும். அதுபோலவே தனது இளமையும் அழகும்

விரும்பிய எவருக்கும் பயன்படாது அழிவதாக என வஞ்சினம் கூறுகிறாள்.

மற்றொரு பாடலில் பரத்தை ஒருத்தி சூரியன் சுற்றித் திரியும் திசைநோக்கி நெருஞ்சிப்பூ சுழலுவதை உவமையாக்கி வஞ்சினம் உரைப்பதைக் காண்கிறோம்.

ஞாயிற்றின் செய்கையை நோக்கிச் சுழலும் நெருஞ்சிப்பூப் போல தலைவனை யான் செல்லுமிடமெல்லாம் என்னோடு திரியச் செய்வேன். அங்ஙனம் செய்யேனாயின் வெற்றிப் பொருந்திய வேலினையும் மழை போன்ற அம்பினையும் மேகம்போன்ற தோற்கிடு கினையுமுடைய சோழரது விற்படை நெருங்கிய அரணையுடைய வல்லத்துபுறத்தேயுள்ள காவற்பகாட்டின்கண் வந்தடைந்த ஆரியரது படைபோல எனது நேரிய முன்கையில் திரண்ட வளையல்கள் சிதைத்தொழிவதாக என வஞ்சினமுரைப்பதை அறிகிறோம்.

*. . . . . . . . . . . . . வானிடைச்*
*சுடரொடு திரிநரும் நெருஞ்சி போல*
*என்னொடு திரியான் ஆயின் வெள்வேல்*
*மாரி அம்பில் மழைத்தோற் சோழர்*
*வில்ஈண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை*
*ஆரியர் படையில் உடைக என்*
*நேர் இறைமுன்கை வீங்கிய வளையே* **(அகம். 336)**

என்பது அப்பாடல்.

சோழரோடு தோற்றுப்போன ஆரியர் பற்றிய செய்தியும் இப்பாடல்வழி அறியக் காண்கிறோம்.

இவ்வாறு மருதப்பாடல்கள் வாயிலாக பல்வேறு வரலாற்றுச் செய்திகளை நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது.

## மருதமும் மக்கட்பேறும்

ஆணும் பெண்ணுமாய் இணைந்து வாழும் இல்வாழ்க்கைக்கு சிறப்பைத் தருவது மக்கட்பேறு. அது இணையரின் அன்பின் வெளிப்பாடு. தொடர்ந்து அன்பை வளர்த்தெடுக்கும் அச்சாணி. ஊரும், உற்றாரும் மணமான தம்பதியரிடம் அதிகமாய் எதிர்பார்ப்பதும் இதைத்தான். எவ்வளவுதான் பெருஞ்செல்வம் படைத்து, உண்டு உடுத்து வாழ்ந்தாலும் மக்களைப் பெறாதோர் வாழ்வு சிறப்பதில்லை.

மக்கட்பேறு இல்லாத வாழ்க்கை பயனற்ற வாழ்க்கை என்கிறார் புறநானூற்றுப் புலவன் பாண்டியன் அறிவுடைநம்பி.

*படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்*
*உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்*
*குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்*
*நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்*
*மயக்குறு மக்களை இல்லோர்க்குப்*
*பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே* (புறம். 188)

என்பது அவர்தம் கருத்து.

*மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்*
*சொற்கேட்டல் இன்பம் செவிக்கு* (குறள். 65)

என்பார் வள்ளுவரும்.

இத்தகு சிறப்புக்குரிய மக்கட்பேற்றில் ஆண்மகனைப் பற்றிய சிறப்பினையே நாம் நமது இலக்கியங்களில் காண்கிறோம். 'மக்கள்' என்று பொதுவாகக் குறிப்பிட்ட திருவள்ளுவரும் அவர்களின் சிறப்புக்களை பெருமைகளைப் பேசுமிடத்து ஆண்பாலை முன்னிலைப்படுத்துவதை நோக்க, அன்றிலிருந்து தொடர்ந்து இருந்துவரும் ஆணாதிக்க சமூக அமைப்பின் வீச்சை எண்ணிப் பார்க்காமல் இருக்க இயலவில்லை.

*ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்* (குறள். 69)

*மகன் தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை*
*என்நோற்றான் கொல் எனும் சொல்* (குறள், 70)

என அடுத்தடுத்த குறட்பாக்களில் தாய்க்கும் சரி, தந்தைக்கும் சரி 'மகனே' பெருமை தேடித் தருவதைக் காண்கிறோம்.

*பெருமையும் உரனும் ஆடூஉ மேன* (தொல். 104)

என தொல்காப்பியரும் சூத்திரம் செய்துள்ளார்.

**மருதப்பாடல்களில் மக்கட்பேறு**

தொல்காப்பியரைப் போல, திருவள்ளுவரைப் போல மருதப் புலவர்களும் ஆண்குழந்தைகளையே முன்னிலைப்படுத்திப் பாடியிருப்பதை மருதப்பாடல்களில் காண்கிறோம்.

தலைவன் தலைவியைப் பார்த்து,

*மாசுஇல் கற்பின் புதல்வன் தாய்* (அகம். 6)

என விளிப்பதைக் காண்கிறோம்.

தலைவன் ஒருவன் பதத்தையொடு வதுவை அயர்தல் வேண்டி தனது வீட்டிலிருந்து தேரேறிச் செல்லத் தயார் நிலையில் இருக்கிறான். செல்வ வளம் பொருந்திய பெரிய வீடு அது. தேரோட்டியும் வீட்டின் பக்கத்தே நிறுத்தி வைத்திருந்த மணி பொருந்திய அழகிய தேரை வீட்டு வாயிலில் கொண்டுவந்து நிறுத்துகிறான். தலைவன் அதில் ஏறிக்கொள்ள தேர் புறப்படுகிறது. அப்போது வீட்டினுள்ளே இருந்து தந்தையைக் காணும் விரும்போடு தளர்நடையிட்டு அத்தலைவனின் புதல்வன் ஓடி வருகிறான். அவன் ஓடிவருவதைக் கண்ட மாத்திரத்தில் தேரை நிறுத்தச் சொல்கிறான் தலைவன். தேர் நிற்கிறது. தலைவன் தேரை விட்டிறங்கி தன்னை நோக்கி தளர்நடையிட்டு ஓடிவரும் தன் புதல்வனை வாரிஎடுத்து மார்போடு அணைத்துக் கொள்கிறான். அன்று தான் செல்லவிருந்த பயணத்தையும் ரத்து செய்துவிட்டு தேரோட்டியை அவன் வீட்டிற்குப் போகச்சொல்கிறான். இப்படியொரு காட்சி இங்கு இடம்பெறுவதைக் காண்கிறோம்.

முதல்நாள் நடைபெற்ற இந்த நிகழ்வைப் பற்றி மறுநாள் தன் தோழியிடம் கூறுகிறாள் தலைவி,

*இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமை உலகமும் மறுகின்று எய்துப*
*செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்*
*பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்*
*வாயே ஆகுதல் வாய்த்தனம் தோழி!*
*நிரைதார் மார்பன் நெடுநல் ஒருத்தியொடு*
*வதுவை அயர்தல் வேண்டி புதுவதின்*
*இயன்ற அணியன் இத்தெரு இறப்போன்*
*மாண்தொழில் மாமணி கறங்க கடைகழிந்து*
*காண்டல் விருப்பொடு தளர்பு தளர்பு ஓடும்*
*பூங்கண் புதல்வனை நோக்கி 'நெடுந்தேர்*
*தாங்குமதி வலவ!' என்று இழிந்தனன் தாங்காது*
*மணிபுரை செவ்வாய் மார்பகம் சிவணப்*
*புல்லி 'பெரும! செய் இனி அகத்து' எனக்*
*கொடுப்போர்க்கு ஒல்லான் கலுழ்தலின் 'தடுத்த*
*மாநிதிக் கிழவனும் போன்ம்' என மகனொடு*
*தானே புகுதந்தோனே* (அகம். 66)

எனக் கூறி மகிழ்கிறாள் தலைவி.

ஒருவற்கு இம்மையிலும், மறுமையிலும் சிறப்பைத் தருவது மக்கட்பேறு மட்டும்தான் என்பதைப் பலரும் கூறக்கேட்டிருக்கிறோம். அது உண்மைதான் என்பதை இந்த நிகழ்ச்சியின் மூலமாகப் பார்த்ததாகத் தலைவி கூறுகிறாள்.

பல நாட்களாகத் தலைவி சொல்லிக் கேட்காத தலைவன், தோழி வாயில் மறுத்து அறிவுறுத்தியும் கேட்காத தலைவன் பூப்போலும் கண்களையுடைய தன் புதல்வனின் தளர்பு தளர்பு நடையில் நெஞ்சைப் பறிகொடுத்தான். மணிபுளர செவ்வாய் மார்பகம் சிவணப்புல்லினான்; தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டு இல்லத்தில் தங்கினான் என்பதை அறிகிறோம்.

**யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வன்**

தேரோடும் வீதி அது. குற்றமற்ற பிஞ்சுக் கைகளையும், அழகிய வாயினையும், குளறு மொழி பேசும் இனிய சொற்களையும் உடைய, பார்த்தாலே பரவசத்தை உருவாக்கி எல்லோராலும்

விரும்பப்படும் அழகிய சிறுவன் தனது வீட்டைவிட்டு அந்த வீதியிலே வந்து தனியனாய் நிற்கிறான். அவன் அப்படி நிற்பதைப் பார்த்த அழகிய கூரிய பற்களைக் கொண்ட பெண்ணொருத்தி அவன் அருகிலே வந்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள் ஒரு கனம். யாரும் பார்க்கவில்லை உடனே அச்சிறுவனை வாரி எடுத்து தன் மார்போடு அணைத்து 'வருக மாள என் உயிர்!' எனக் கூறி பெரிதும் உவந்து நின்றாள். மகனை வீட்டிலே காணாது வெளியே வந்த தாய் இதைப் பார்க்கிறாள். குழந்தையின் தாயைக் கண்டதும் இவள் துணுக்குற்றாள். இதைக் கவனித்த தாய்,

*மாசுஇல் குறுமகள் எவன் பேதுற்றனை?*
*நீயும் தாயை இவற்கு* (அகம். 16)

என்றாள்.

*மாசுஇல் அங்கை மணிமருள் அவ்வாய்*
*நாவொடு நவிலா நகைபடு தீம்சொல்*
*யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வன்*
(அகம். 16)

என்பவன் தலைவனின் அன்புமகன். அவனைத் தெருவிலே கண்டு வாரி அணைத்தவள் தலைவனோடு உறவு கொண்ட பரத்தை. அவளைப் பார்த்து, 'குற்றமற்ற இளம்பெண்ணே! ஏன் அச்சப் படுகிறாய்? நீயும் இவனுக்கு தாய்தான்' எனத் தலைவி கூறுவதை இங்கு காண்கிறோம். இது மட்டுமல்ல. இப்படியான நிகழ்ச்சி நடந்ததாகத் தனது கணவனிடம் கூறும் தலைவி 'வானத்து அணங்கு அருங் கடவுள் அன்னோள் நின் மகன் தாய் ஆதல் புரைவது ஆங்கெனவே' என்கிறாள்.

இங்கு பரத்தையை தன் மகனுக்கு மற்றொரு தாயாக ஏற்றுக் கொள்வதோடு, அவள் குற்றமற்றவள்; வானத்து உரோகிணி நட்சத்திரத்தைப் போன்று புனிதமானவள் என்றெல்லாம் தலைவி கூறுவதை நோக்கும்போது இது எந்த மாதிரியான ஒழுக்கம்? என்ற எண்ணமே மேலோங்கி நிற்கிறது.

## புதல்வரைப் பெற்றதால் முதன்மையிடம்

அன்றும் சரி; இன்றும் சரி; புதல்வர்களைப் பெற்றால்தான் பெண்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. விழாக்கள்,

சடங்குகள் அனைத்திற்கும் புதல்வரைப் பெற்ற தாய்மார்களே முன்னிலை வகிப்பதை சமுதாயத்தில் பரவலாய்க் காணலாம். ஒரு பெண் தாய்மையில்தான் முழுமையடைகிறாள் என்பது அனைத்து சமூகத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு நிலை.

மருதப்பாடலில் காட்டப்பெறும் திருமணச் சடங்கு நிகழ்ச்சியில் இதைக் காண்கிறோம்.

*புதல்வற் பயந்த திறலை அவ்வயிற்று*
*வால்இழை மகளிர் நால்வர் கூடிக்*
*கற்பினின் வழாஅ நற்பல உதவிப்*
*பெற்றோற் பெட்கும் பிணைணை ஆகென* (அகம். 86)

மற்றும் 'தேமொழிப் புதல்வர்' (அகம். 316), 'என் மகன்' (அகம். 26) என்ற இடங்களிலும் ஆண் குழந்தைகள் பற்றி மட்டுமே பேசப்படுகிறது.

ஒரே ஒரு இடத்தில் மட்டும் பெண் குழந்தையின் சிறப்பு பேசப்படுகிறது. அது குழந்தை நிலையில் இல்லை சற்று வளர்ந்த நிலையில் 'பாண்மகள்' என்று கூறுப்படுகிறது.

கள் உண்டிருந்த தன் வயதான தந்தைக்கு தூண்டிலில் மீன்பிடித்து வஞ்சி விறகில் அதைச்சுட்டு உண்பிக்கிறாள். அப்பெண்,

*நாண்கொள் நுன்கோலின் மீன்கொள் பாண்மகள்*
*தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்*
*நாரரி நறவுண்டு இருந்த தந்தைக்கு*
*வஞ்சி விறகின் சுட்டு வாய் உறுக்கும்* (அகம். 216)

காட்சி தந்தைக்கும் மகளுக்கும் இடையே இருந்த பாசப் பிணைப்பைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

# இறுவாய்

ஏனைய நிலப்பகுதிகளைக் காட்டிலும் மருத நிலப்பகுதி வளம் நிறைந்தது. விளைச்சல் மிகுந்தது. உபரி உற்பத்தியைத் தருவது என்பதையும், பல சிற்றூர்களைக் கொண்டதோடு மட்டுமல்லாமல் நகர்ப் பகுதிகளையும் சேரிகளையும் உள்ளடக்கியது என்பதையும், இங்கு களமர், வினைஞர், உழவர், உழத்தியர் போன்ற குலமக்களும், ஊரன், மகிழ்நன், கிழவன் போன்ற தலைமக்களும் வாழ்ந்தனர் என்பதையும் பொது மக்களிடையே ஏற்பட்ட வழக்குகளை விசாரித்து நீதி வழங்க ஊர் பொதுமன்றம் இருந்தது என்பதையும் "மண்ணும் மக்களும்" என்ற முதல் இயல் விளக்குகிறது.

இங்கு வாழ்ந்த மக்கள் கூலி விவசாயிகளாகவும், சிறு விவசாயிகளாகவும், பெரும் நிலக்கிழார்களாகவும் வர்க்க அடிப்படையில் பிரிந்திருந்தனர் என்பதையும், இவர்களின் ஒய்வு நேரங்களைக்கூட ஒவ்வொரு வர்க்கத்தாரும், ஒவ்வொரு முறையில் செலவிட்டுத் தங்களை வர்க்க அடிப்படையில் வேறுபடுத்திக் கொண்டார்கள் என்பதையும் "உழைப்பும் ஒய்வும்" என்ற இரண்டாவது இயலில் பார்த்தோம்.

மருத நிலத்துவாழ் மக்கள் இந்திர விழா, புனலாடு விழா போன்ற விழாக்களைக் கொண்டாடினார்கள் எனவும், சிறுதெய்வ வழிபாடு இருந்தது எனவும், பெண்களால் நிகழ்த்தப்படும் குரவைக் கூத்து, துணங்கைக் கூத்து ஆகியன நடைபெற்றன எனவும் இம்மக்களால் மழைச்சடங்கு, விதைப்புச் சடங்கு, மணச்சடங்கு, ஈமச்சடங்கு முதலிய சடங்குகள் பெரும் நம்பிக்கையோடு நிகழ்த்தப்பட்டன எனவும், "விழாக்களும் சடங்குகளும்" என்னும் தலைப்பிலமைந்த மூன்றாவது இயலில் அறிகிறோம்.

'குடும்பம்' என்ற அமைப்பு மருத நிலத்தில்தான் முழுமை பெற்றது என்பதையும், குடும்ப உருவாக்கத்திற்கான அனைத்து வாய்ப்புகளுக்கும் களனாய் மருதநிலம் அமைந்தது என்பதையும், மருத நில விளைச்சலில் கிடைத்த அபரிதமான உபரிதான் உடைமையாயிற்று என்பதையும், உடைமை அதிகம் சேரச் சேர

ஆதிக்க நிலை எய்தும் போக்க மேலோங்கிய நிலையையும் நான்காவது இயலான "குடும்பமும் உடைமையும்" விளக்கி நிற்கிறது.

இனக்குழுச் சமுதாய அமைப்பு சிதைவுற்று நாகரிகச் சமுதாய அமைப்பான மருதநிலச் சமுதாய அமைப்பிலே அரசுகள் தோன்றின என்பதையும், மக்களிடம் அதிகாரம் செலுத்தியவர்களின் ஆதிக்க வளர்ச்சியே அரசு உருவாக்கத்திற்குக் காரணம் என்பதையும், மருத நிலத்தில் தோன்றிய இவ்வரசனே வேந்தன் எனப்பட்டான்; அவ்வேந்தனே ஆரியமயமாக்கப்பட்டு இந்திரன், தேவேந்திரன் என அழைக்கப்பட்டான் என்பதையும், இவ்வாறு உருவான அரசு பின்படிப்படியே ஒரு நிறுவன அமைப்பாக வளர்ந்தது என்பதையும் "அரசும் நிறுவனமயமாதலும்" என்ற ஐந்தாவது இயல் பேசுகின்றது.

மருத நிலத்தின் செழிப்பான வாழ்வும், ஆணாதிக்கமுமே பரத்ததை உருவாகக் காரணமாயிற்று என்பதையும், உலகம் முழுவதும் போர்ச் சமூக அமைப்பில் பரத்தமை வளர்ச்சியுற்றதைப் போலவே தமிழ்ப் போர்ச் சமூக அமைப்பிலும் பரத்தமை இடம்பெறாயிற்று என்பதையும், செல்வச் செழுமை மிக்க மேட்டுக்குடியினரின் வாழ்க்கையில்தான் பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்துரைப்பதையும் ஆறாவது இயலான "பரத்தமையும் பண்பாட்டுறவும்" வழி அறிகிறோம்.

சேர சோழ பாண்டிய மூவேந்தர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும், கோசர், யவணர் போன்ற அயல் தேசத்தவர் பற்றிய குறிப்புகளும், வெற்றிகளைக் கொண்டாடி, பாடியவர்களுக்குப் பரிசு வழங்கும் நாண்மகிழ் இருக்கை இருந்ததற்கான குறிப்புகளும், போர்க் களத்திலே பங்கேற்று வெற்றியைத் தேடித் தந்த வீரர்களுக்கு கள்ளுடைப் பெருஞ்சோறு அளித்த குறிப்புகளும், அக்காலம் கலைஞர்களின் வாழ்நிலை குறிப்பாக ஆட்டன் அத்தியின் இறவா புகழ், மீன்பிடி மகளிர், உள்ளுறை உவமச் சிறப்பு, பரத்தையின் சூளுரை, வஞ்சினம் யாவும் 'மருதமும் வரலாற்றுப் பதிவுகளும்' என்ற ஏழாவது இயலில் விளக்கப்படுகிறது.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் குழந்தைச் செல்வம் என்றளவுக்கு இன்றியமையாதது. தலைவனின் நன்னெறிக்கு குழந்தை எவ்வாறு உதவுகிறது என்பனவற்றையெல்லாம் 'மருதமும் மக்கட்பேறும்' என்ற எட்டாவது இயல் எடுத்தியம்புகிறது.

இதுகாறும் நாம் அறிந்த மருதப்பாடல்களில் காட்டப்படும் மக்களின் வாழ்வியல் கூறுகளிலிருந்து கீழ்க்காணும் முடிவுக்கு வரலாம்.

1. இங்கு வாழ்ந்த மக்கள் வர்க்கப் பிரிவுகளாகப் பிரிந்திருந்தனர்.

2. அடிப்படை உழைக்கும் மக்களுடைய ஒய்வு நேரம் ஒரு வகையாகவும், மேட்டுக்குடி மக்களின் ஒய்வு நேரம் வேறு வகையாகவும் செலவிடப்பட்டன.

3. தலைமக்களாகச் சித்தரிக்கப்பட்டவர்கள் இந்திர விழா, புனலாடு விழா போன்ற விழாக்களை நடத்திக் கொண்டிருந்த நிலையில் அடிப்படை மக்கள் சிறுதெய்வ வழிபாட்டை உயிர்ப் பலியுட்டும், கள்ளைப் படைத்தும் நிறைவேற்றினர்.

4. குடும்பத்தில் ஆணே உயர்ந்தவனாகச் சித்தரிக்கப்பட்டான். அவனே உடைமைக்கும் சொந்தக்காரன், ஆணாதிக்கச் சமூகமாகவே மருதநிலச் சமூக அமைப்பு இருந்தது.

5. பெண்களைத் தங்கள் ஆதிக்கத்திற்கு உட்படுத்திய ஆண்கள் தமக்குள் சமமாக மதிக்கப்படவில்லை. ஆண்களில் ஆதிக்கம் பெற்ற ஒஒரு சிலரே, அரசை அமைத்துக் கொள்ள முடிந்தது.

6. ஆணாதிக்கமும் செல்வச் செருக்கும் பரத்தமை உருவாக்கத்திற்குக் காரணமானது. மருதநிலப் பண்பாடே பரத்தமைப் பண்பாடு என்று கூறத்தகு நிலையில் பரத்தமை பரவியிருந்தது. பின்னால் தோன்றிய திருவள்ளுவர் போன்ற அறவாணர்களால் கடிந்து ஒதுக்கும் நிலைக்கு அது வேரூன்றியிருந்தது.

7. மருதப் பாடல்கள் வாயிலாகவே பல அரிய வரலாற்றுச் செய்திகளையும், கலைஞர்கள் பற்றிய செய்திகளையும் நாம் அறிந்து கொள்கிறோம்.

8. மக்கட்பேறு குறிப்பாக ஆண்மக்கட்பேறு ஏனைய சங்க இலக்கியங்களைப் போல மருதப்பாடல்களிலும் சிறப்பாக பேசப்படுகிறது. அத்துடன் பரத்தையை நாடிச் செல்லவிருந்த தலைவனின் செயலைத் தடுத்து, அவனை நல்வழிப்படுத்தும் நோக்கில் இங்கு மக்கட்செல்வம் படைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

# துணை நூல் பட்டியல்


## அடிப்படை நூல்கள்

1. **அகநானூறு,** ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1965.
2. **ஐங்குறுநூறு,** பொ.வே. சோமசுந்தரனார் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1966.
3. **குறுந்தொகை,** பொ.வே. சோமசுந்தரனார் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1955.
4. **தொல்காப்பியம் பொருளதிகாரம்,** இளம்பூரணர் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1956.
5. **நற்றிணை,** பின்னத்தூர் அ. நாராயணசாமி அய்யர் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1962.
6. **பதிற்றுப்பத்து,** ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1958.
7. **பரிபாடல்,** பொ.வே. சோமசுந்தரனார் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1964.

## துணைநூல்கள்

1. அறவாணன் க.ப., **தமிழ்ச் சமுதாய வரலாறு,** தமிழ்க் கோட்டம், புதுச்சேரி, முதல் பதிப்பு : அக்டோபர் 1992.
2. அருணகிரி மு., **தமிழ் இலக்கியத்தில் அங்கதம்,** மரகதம் பதிப்பகம், மதுரை, முதல் பதிப்பு : டிசம்பர் 1989.
3. ஆறுமுகம் அ., **சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை அரசு,** பாவேந்தர் பதிப்பகம், திருமழபாடி, முதல் பதிப்பு: நவம்பர் 1994.
4. எங்கெல்ஸ், **குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்,** முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, மூன்றாம் பதிப்பு: 1978.

5. குருசாமி சித்தன், **தமிழ் இலக்கியத்தில் பள்ளர்,** தேவேந்திரா மன்றம், கோயமுத்தூர், முதல் பதிப்பு, டிசம்பர் 1993.

6. குளோரியா சுந்தரமதி, **சங்க இலக்கியம் மருதம்,** கேரளப் பல்கலைக்கழகம், முதல் பதிப்பு : மார்ச் 1973.

7. கைலாசபதி க., **சமூகவியலும் இலக்கியமும்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு : பிப்ரவரி 1988.

8. சண்முகம் பிள்ளை மு., **சங்கத் தமிழர் வாழ்வியல்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல் பதிப்பு : 1977.

9. சிவசுப்பிரமணியன் ஆ., **அடிமை முறையும் தமிழகமும்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதல் பதிப்பு : ஜூன் 1984.

10. சிற்பி, **இலக்கியச் சிந்தனை,** கோலம் வெளியீடு, பொள்ளாச்சி, முதல் பதிப்பு : ஆகஸ்ட் 1989.

11. சுப்பிரமணியன் கா., **சங்ககாலச் சமுதாயம்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு : ஆகஸ்ட் 1987.

12. சுப்புரெட்டியார் நா., **அகத்திணைக் கொள்கைகள்,** பாரி நிலையம், சென்னை, முதல் பதிப்பு : டிசம்பர் 1981.

13. ஞானி, **மார்க்சியமும் தமிழ் இலக்கியமும்,** பரிமாணம் வெளியீடு, கோவை, முதல் பதிப்பு : மார்ச் 1988.

14. தேவநேயப் பாவாணர், **பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, இரண்டாம் பதிப்பு : செப்டம்பர் 1992.

15. தேவநேயப் பாவாணர், **பழந்தமிழாட்சி,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, நான்காம் பதிப்பு : ஜூன் 1992.

16. பிள்ளை கே.கே., **தமிழ் வரலாறு – மக்களும் பண்பாடும்,** தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், முதல் பதிப்பு, 1972.

17. பொகுஸ்லாவ்ஸ்கி, **இயக்கவியல் பொருள் முதல்வாதமும், வரலாற்று பொருள் முதல்வாதமும்** (மொ.பெ.), முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1978.

18. மாணிக்கம், வ.சுப., **தமிழ்க்காதல்,** பாரி நிலையம், சென்னை, முதல் பதிப்பு : 1962.

19. ராஜ்கௌதமன், **தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு,** கௌரி பதிப்பகம், புதுச்சேரி, முதல் பதிப்பு : ஏப்ரல் 1994.

20. வானமாமலை, நா., **தமிழர் வரலாறும் பண்பாடும்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு : ஜூலை 1992.

21. விஜயலட்சுமி, ஏ., **தமிழக மகளிர்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல் பதிப்பு : 1997.

**கலைக்களஞ்சியங்கள், ஆய்வுக் கட்டுரைகள்**

1. தமிழ்க் கலைக் களஞ்சியம், தொகுதி 1.
2. Encyclopaedia, Brittanica, Volume IX.
3. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 2, முதல் பதிப்பு : ஜூன் 1988.

**இதழ்கள்**

பாட்டாளி முழுக்கம், இதழ் 37.

தமிழ் மாத இதழ்.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| நவீன நாடகங்களும் ஊடகங்களும் | 50.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மூவர் தமிழ் – மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்களின் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| மொழிபெயர்ப்பு ஒரு கவின் கலை | 75.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| கவிஞர் குலோத்துங்கனின் 'மானுட யாத்திரை' காவிய வானில் ஒரு தாரகை | 45.00 |
| தமிழ் நாடக வகையும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு. என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |

**691 மருதத்தில் மக்கள் வாழ்வியல் 35.00**